# விரைவில் வருகிறது

# பவளக்கொடி

## இசை நாடகம்

வேதாள உலகத்தில் சிறந்த அம்சங்களில் இது ஒன்று



| | |
|---|---|
| பி.ஏ.பெரியநாயகி | குமாரி கமலா |
| டி.எஸ்.பகவதி | லலிதா |
| எம். எஸ்.ராஜேஸ்வரி | பத்மினி |
| டி.வி.ரத்னம் | காந்திமதி |



**டி. ஆர்.மஹாலிங்கம்** நடிக்கும்

**AVM** புரொடக்ஷன்ஸ்

# வேதாள உலகம்

## தமிழ்

( ராவ் பகதூர் ப.சம்பந்த முதலியார் எழுதிய கதையைத் தழுவியது)

நடிகர்கள் :

| | |
|---|---|
| K.சாரங்கபாணி...... | யோக மங்களம் |
| R.பாலசுப்ரமணியம் | ....K.R.செல்வம் |
| G.M.பஷீர்............ | C.T.ராஜகாந்தம் |
| கொளத்து மணி...... | .........B.சந்திரா |

## கண்டுகளியுங்கள்

நாட்டிய கலாமணிகள் முதல் முறையாக
ஒருங்கு சேர்ந்து நடன விருந்தளிக்கிறார்கள்

குமாரி கமலா·லலிதா·பத்மினி·தாராசௌத்ரி·யோக மங்களம்

## இன்னும்

கான ஸரஸ்வதி **D.K.பட்டம்மாள்** பாரதி பாடல்களைப்பாடுகிறார்
அதற்கு **குமாரி கமலா** நாட்டிய மாடுகிறார்..

**AV.மெய்யப்பன்** **M.V.ராமன், P.நீலகண்டன்**




விரைவில் தமிழ்நாட்டின் முக்கிய இடங்களில் வெளியாகிறது...

ரணத்தை ஆற்றுகிறது, கரகரப்பை சமனப்படுத்துகிறது.




'ஆல்கோப்லோகிஸ்டின்' வைத்திய முறைப்படி தயாரித்த மருந்து. இது நிமோனியா, இன்ப்ளூயென்சா, வீக்கம், ரணம் முதலிய உபாதைகளுக்கு கைகண்ட மருந்து.

வீட்டில் ஒருதின மருந்தை வாங்கி வைத்திருங்கள்.

# ஆல்கோப்லோகிஸ்டின்

AL. 501 Tamil

இது ஒரு அலெம்பிக் தயாரிப்பு.

---



# பார்லிக் கஞ்சி தயாரிக்க சுலபமான முறை

இரண்டு கரண்டி பார்லியை சிறிது தண்ணீரில் பசைபோல் கரைத்து, பின் இரண்டு டம்ளர் தண்ணீரில் போட்டு பத்து நிமிஷம் நன்றாகக் கொதிக்கவைக்கவும். பின்னர் இறக்கி ருசிக்கு வேண்டிய உப்பு அல்லது சர்க்கரை சேர்த்துப் பருகவும். இவ்வளவு சுலபத்தில், ஐந்தே நிமிஷத்தில் ஓர் ருசியான சிறந்த பானத்தைத் தயாரிக்கலாம். வியாதியுற்றோர் குணமாகும் தருவாயிலுள்ளவர் பலஹீனருக்கு இது சிறந்த உணவு. பியூரிடி பார்லி புதியதான தானியம் [illegible] தயாரித்து காற்று புகாத டப்பாக்களில் அடைக்கப்பட்டிருக்கிறது. ஒரு பங்கு பியூரிடி பார்லி எட்டு பங்கு அதிக பார்லிக்கு ஈடாகும். [illegible]




# பியூரிடி இந்தியன் பார்லி

அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிட்., 20/1 செட்லா ரோடு, கல்கத்தா

தென்னிந்தியாவுக்கு ஏஜண்டுகள்:

மெஸர்ஸ். பாரி அண் கோ., லிமிடெட், த. பெ. நெ. 12. மதராஸ்

நோய்க்குப் பிறகு வெகு விரைவில் உடம்பு தேறவும் பலவீனத்தைப் போக்கவும்

# லெஸிவின்

போஷணைக்குப் பெயர்பெற்ற சிறந்த டானிக்




உடலையும் நரம்புகளையும் வலுப்படுத்தும்

●

லெஸிதின், வைடமின்கள் கொய்னா சத்துக்கள் அடங்கியது

●

எல்லா உயர்ந்த கெமிஸ்டுகளிடமும் கிடைக்கும்.

## பெங்கால் கெமிகல்

கல்கத்தா :: பம்பாய்

ஏஜண்டுகள் :

என். தேசாய் கௌண்டர் & கோ.,
41, பந்தர் தெரு :: மதராஸ்

---

## உயர்ந்த (லீவர்) கை கெடியாரங்கள்



நவீன அமைப்புகள். ஸ்விஸ் தயாரிப்பு. சரியாக மணி காட்டும். மூன்று வருஷங்களுக்கு உத்தரவாதம். ஜுவெல்கள் பொருத்தியவை

### கெடியாரம் நெ. 1 வட்டமான தட்டை வடிவம்

வட்டமானது அல்லது சதுரமானது ரூ. 18-8-0
டை உயர்ந்த ரகம் ரூ. 20-8-0
4 அல்லது 5 ஜுவெல்ஸ் தட்டையானது ரூ. 24-0-0
டை உயர்ந்த ரகம் ரூ. 27-0-0
5 அல்லது 7 ஜுவெல்ஸ் ரோல்டு கோல்டு கேஸ் ரூ. 50-0
டை உயர்ந்த ரகம் ரூ. 55-0
15 ஜுவெல்ஸ் குரோமியம் ரூ. 38-0
ரோல்டு கோல்டு (10 வருஷ உத்தரவாதம்) ரூ. 75-0

மேற்படி கெடியாரங்களில் செகண்ட்முள்ளைச் சேர்க்கவும் தேவையானால் ரூ. 4, அதிகப்படி.

### கெடியாரம் நெ. 2 & 3. நீண்ட சதுரம் அல்லது டோனோ வடிவம்

4 அல்லது 5 ஜுவெல்ஸ் - குரோமியம் ரூ. 35-0
டை உயர்ந்த ரகம் ரூ. 40-0
7 ஜுவெல்ஸ் குரோமியம் ரூ. 45-0
டை ரோல்டு கோல்டு (10 வருஷ உத்தரவாதம்) ரூ. 58-0
15 ஜுவெல்ஸ் பளபளப்பான குரோமியம் ரூ. 70-0
டை ரோல்டு கோல்டு (10 வருஷ உத்தரவாதம்) ரூ. 90-0

### கெடியாரம் நெ. 4 வளைந்த வடிவம்

4 அல்லது 5 ஜுவெல்ஸ் குரோமியம் ரூ. 38-0
டை உயர்ந்த ரகம் ரூ. 42-0
7 ஜுவெல்ஸ் குரோமியம் ரூ. 46-0
டை ரோல்டு கோல்டு (10 வருஷ உத்தரவாதம்) ரூ. 60-0
15 ஜுவெல்ஸ் பளபளப்பான குரோமியம் ரூ. 72-0
டை ரோல்டு கோல்டு (10 வருஷ உத்தரவாதம்) ரூ. 92-0

அலாரம் டைம்பீஸ் ரூ. 18/-
சற்று உயர்ந்த ரகம் ரூ. 22/-
மிகவும் உயர்ந்த ரகம் ரூ. 25/-

மேற்படி ரகங்களின் ஸ்பிரிங் வரைக்கு 12 சதவிகிதம் அதிகம். தபால் பாக்கிங் செலவு பிரத்தியேகம். ஒரே தடவையில் இரண்டுக்கு ஆர்டர் செய்தால் இலவசம். ஆர்டர் செய்யும்போது கெடியாரத்தின் நெம்பரைக் குறிப்பிடவும்.

பௌண்டன் பேனாக்கள் ரூ. 3/8.
நடுத்தரமானவை ரூ. 4/8.
உயர்ந்த ரகம் ரூ. 5/8.

தபால் செலவு பிரத்தியேகம். மேற்படி கெடியாரம், பேனாக்களில் ஏதாவது மூன்றுக்கு ஆர்டர் செய்தால் ரூ. 5/8. பெறுமானமுள்ள ஒரு பௌண்டன் பேனா இலவசமாகக் கொடுக்கப்படும்.

STANDARD WATCH COMPANY
POST BOX NO. 11419 : CALCUTTA (K)

# அஞ்சலி தேவியின்

## சருமம் லக்ஸ் டாய்லட் சோப்பை உபயோகப் படுத்துவதால் மிருது வாகவும் மென்மை யாகவும் இருக்கின்றது.




"லக்ஸ் டாய்லட் சோப் என்னுடைய தவறாமல் அழகு படுத்தும் முறை" என்று அழகிய அஞ்சலி தேவி சொல்கிறார். "அதனுடைய வெண்ணிறம் கொண்ட நுரை என்னுடைய சருமத்தை மிருதுவாகவும் தூய்மையாகவும் சுத்தம் செய்கின்றது. மென்மையான சருமத்தை விரும்பும் ஒவ்வொரு ஸ்திரீயும் நான் செய்வது போல லக்ஸ் டாய்லட் சோப்பினால் சுத்தம் செய்து கொள்ளவேண்டும்."

# லக்ஸ் டாய்லட் சோப்

*சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்!*

LTS 189-23 TM



ஜெமினி

# "சந்திரலேகா"

டாக்கீ ரிகார்டுகள்

ஸ்ரீமதி டி. ஆர். ராஜகுமாரி

N. 28001

இன்று எனது குதூஹலம்

பாலன் கருணை புரிவான்



N. 18396

ஹேராயோ ஙௌகேஸி

(நாடோடி கோரஸ்)

மைலாப்பூர் வக்கீலாத்து

'மிஸ்மாலினி'யிலிருந்து




"ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்"

சிட்டாடலின்

# ஞான சௌந்தரி

டாக்கீ ரிகார்டுகள்

N. 28003

விதி இதுவோ

ஜீவிய பாக்கியமே

N. 28004

வெட்டுண்ட கைகள்

ஜன்ம பயன் அடைந்தேனே

N. 28005

குலமாமணி

அருள் தாரும் தேவ மாதா





"ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்"



# நேர்மையின் சின்னங்கள்

..........அழகிற்கும் உயர்ந்த வேலைப்பாட்டிற்கும். கண்ணிய முள்ள ஆடவரும் பெண்டிரும் விரும்பும் பார்வைக்கு அழகாகவும் வருஷக் கணக்கில் நீடித்து நன்கு உழைக்கக் கூடியதுமான ஜீகர் லீகௌல்ட்ரியாரால் தயார் செய்யப்பட்ட மூன்று கடிகாரங்கள் படத்தில் விளக்கப் பட்டுள்ளன.



● **No. 2323**

ஜீகர் லீகௌல்ட்ர் தானே சாவி கொடுத்துக் கொள்ளும் அழகிய மாடல். ஸ்டீல் கேஸ், ஸ்வீப் செகண்டு முள், பளபளப்பான டயலுடன் கூடியது. ரூ. 300





● **No. 2233** ஜீகர் லீகௌல்ட்ர் ஸ்டேபிரைட் ஸ்டீல் கேஸுடனும் படத்திலுள்ளது போன்ற செகண்டு முள்ளுடனும் கூடியது. ரூ. 297

**No. 2483** மேற்கூறிய மாதிரியிலேயே சிறிய செகண்டு முள்ளுடன் கூடியது. ரூ. 275

**No. 2543** ஜீகர் லீகௌல்ட்ர் — ஸ்டேபிரைட் ஸ்டீல் டன்ட்ப்ரூப், அதிர்ச்சியை ஆகர்ஷிக்கவல்ல கேஸுடன் சிறிய செகண்டு முள்ளுடன் கூடியது. ரூ. 288

**No. 2393** மேற்கூறிய மாதிரியிலேயே மத்தியில் செகண்டு முள்ளுடன் கூடியது. ரூ. 300

# FAVRE-LEUBA

**பேவர் - லூபா & கம்பெனி லிமிடெட், பம்பாய் - கல்கத்தா**

கல்கி

## பொருளடக்கம்

மலர் 7 } ஜூலை 25 { சர்வஜித்து
இதழ் 52 } { ஆடி 10






நான் வாடர்மன் பேனாவை விரும்பி வாங்குவதற்குக் காரணம், அதன் சிறந்த வேலைப்பாடு, நம்பிக்கையான உழைப்பு. நான் எழுதுவதற்கு உகந்தபடி வளைந்து கொடுக்கக்கூடியதோ, உறுதியாகவோ உள்ளதைப்பொறுக்கியெடுக்கக்கூடியகையாலேயே ராவப்பட்ட பலதர 14 காரட் நிப்புக்கள், இவைதான். சுலபமாக மை நிரப்பக்கூடிய லீவர் எல்லாவே தொல்லைகளைப் போக்குகிறது. ஒரே தடவை அழுக்கி எடுத்தால்போதும் பேனா நிரம்பி விடும். இதுதான் முக்கியமானது. ஒரு தொந்தரவும் இல்லை. பணத்துக்குத் தகுந்த உண்மையான மதிப்பு. வியாபாரியான எனக்கல்லவா தெரியும் இதன் மதிப்பு.



# Waterman's

## வாடர்மன்

## பேனாக்கள், பென்ஸில்கள், மைகள்

வர்ண ஜாலங்கள் தான் இக்காலத்திய நாகரிகம். பெயர்பெற்ற ''டாப் பீல்'' பாட்டில்களில் ஒன்ன வாடர்மன் வர்ண மைகளைக் காண்பிக்கும்படி கேளுங்கள். ஒன்பது அழகான வர்ணங்களில் உள்ளன.

வியாபார விவரங்களுக்கு எழுதுங்கள்:—ஷைதம் ஏபர்க்ரோம்பி & கம்பெனி, லிமிடெட்.
போர்ப்ஸ் பில்டிங், ஹோம் தெரு, பம்பாய்.

EN' 10-3.






மலர் 7 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார். | இதழ் 52

# என்ன சேதி?

## ஏழாண்டு பூர்த்தி

**உ**ங்கள் "கல்கி" பத்திரிகைக்கு இந்த இதழோடு ஏழாம் ஆண்டு பூர்த்தி யடைகிறது. இந்த ஏழாண்டுக்குள் தேசத்தில் எத்தனை எத்தனையோ மாறுதல்கள் நேர்ந்திருக்கின்றன. பாரத நாடு பூரண சுதந்திரம் பெற்றிருக்கிறது. "கல்கி" ஆரம்பமானபோது இந்திய நாட்டின் மாபெரும் தலைவர்கள் எல்லாரும் சிறையில் இருந்தார்கள். இன்று அத்தலைவர்களில் பலர் அரசாங்க பீடங்களில் இருக்கிறார்கள். "கல்கி"யின் ஏழாம் ஆண்டு பூர்த்தி இதழ் ஜவாஹர்லால் மலராக வெளிவருவது நமக்கு அளவில்லாத மகிழ்ச்சி யளிக்கிறது.

அடுத்த ஆகஸ்டு 1உ "கல்கி"க்கு எட்டாம் ஆண்டு பிறக்கிறது. அந்த ஜன்ம நட்சத்திர இதழ் பல சிறப்புக்களுடன் விளங்குவதோடு, 1947-ம் வருஷச் சிறு கதைப் போட்டியில் பரிசு பெற்ற கதையையும் தாங்கி வெளிவரும். சிறு கதைப் போட்டியில் பஞ்சாயத்தாரின் முடிவை மற்றொரு பக்கத்தில் காணலாம்.

## வருந்தி அழைப்பதேன்?

"கவர்னர் பதவிகளுக்கு இனி பிரிட்டிஷாரை இறக்குமதி செய்வதில்லை என்று இந்திய சர்க்கார் தீர்மானித்திருக்கிறார்கள். அப்படியிருக்க, பாகிஸ்தான் சர்க்கார் மாத்திரம் கவர்னர் பதவிகளை வகிப்பதற்காகப் பிரிட்டிஷாரை, — அதிலும் அடக்குமுறைகளை இரக்கமின்றி உபயோகிப்பதில் கைதேர்ந்த பிரிட்டிஷாரை ஏன் வருந்தி அழைத்து நியமித்திருக்கிறார்கள்?" என்று கான் அப்துல் கபார்கான் பாகிஸ்தான் அரசியல் நிர்ணய சபையில் கேட்டார். அந்தக் கேள்விக்குப் பாகிஸ்தான் சர்க்கார் நிர்வாகிகள் அப்போது சரியான பதில் கூறவில்லை. ஆனால் இப்போது அதற்குப் பதில் சொல்லியிருக்கிறார்கள். அவர்கள் அளித்துள்ள பதில் என்ன? "பிரிட்டிஷாரை மாத்திரம் நாங்கள் வருந்தி அழைக்கவில்லை. பிரிட்டிஷாரின் ஆட்சி காலத்தில் இருந்த கொடிய அடக்குமுறைகளையும் வருந்தி அழைத்து வருகிறோம்" என்று சொல்லியிருக்கிறார்கள்!

பிரிட்டிஷாரின் ஆட்சியில் சுமார் ஐம்பது வருஷ காலமாகப் பட்டாணியர்கள் எந்தக் கொடிய அடக்குமுறைச் சட்டத்தை எதிர்த்துப் போராடி வந்தார்களோ, அதே சட்டத்தின் கீழ் பாகிஸ்தான் சர்க்கார் பகிரங்க விசாரணை எதுவுமின்றி கான் அப்துல் கபார்கானைத் தண்டித்தனர். இப்போது மறுபடியும் அதே பிரிட்டிஷ் ஆட்சி காலத்திலிருந்த மற்றொரு சட்டத்தையும் பாகிஸ்தான் சர்க்கார் சுவீகாரம் செய்து கொண்டிருக்கிறார்கள். கவர்னர் ஜெனரலின் கட்டளைக்கு இணங்க மந்திரி சபையைக் கலைத்து விட்டுச் சர்வாதிகார ஆட்சி நடத்த கவர்னர்களுக்குப் புதிய அவசரச் சட்டம் அதிகாரம் அளிக்கிறது.

## எதுவும் நேரலாம்!

**பா**கிஸ்தானில் பாலும் தேனும் வழிந்தோடப் போகிறது என்று நினைத்துச் சென்ற பதினாயிரக் கணக்கான முஸ்லிம்கள் மயக்கம் தெளிந்து மீண்டும் இந்தியாவுக்கு வந்து கொண்டிருக்கிறார்கள். வடமேற்கு எல்லைப்புறத்தில் இப்பி பக்கிரியின் வேலைகள் மும்முரமாக நடைபெற்று வருகின்றனவாம். கிழக்கு

பாகிஸ்தானில் ஏற்பட்ட உருது பாஷை எதிர்ப்பு முற்றிலும் அடங்கி விட்டதாகத் தோன்றவில்லை. மேற்கு பஞ்சாபிலோ மந்திரிகள் ராஜிநாமா செய்து வருகின்றனர். சிந்துவிலிருந்து கராச்சியைப் பிரிக்க காயிதே ஆஜம் போட்ட திட்டத்துக்கு எதிர்ப்பு அதிகமாகி வருகிறது. பாகிஸ்தான் மந்திரி சபைகளின் ஊழல்களைப் பற்றியோ பாகிஸ்தான் பிரமுகர்கள் பகிரங்கமாகக் கண்டிக்க ஆரம்பித்திருக்கிறார்கள். எனவே இத்தகைய குழப்பங்கள் முற்றினால் பாகிஸ்தான் மாகாண மந்திரி சபைகளை யெல்லாம் டிஸ்மிஸ் செய்து விட்டு கவர்னர்கள் சர்வாதிகார ஆட்சி நடத்தும்படியான நிலைமை ஏற்படலாம். பின்னர் கவர்னர்களையெல்லாம் டிஸ்மிஸ் செய்து விட்டு காயிதே ஆஜம் சர்வாதிகார ஆட்சி செய்யும்படியான நிலைமையும் ஏற்படலாம்!

## தவறி விட்டார்கள்

உணவு நெருக்கடி ஒருபுறமிருக்க, கொஞ்ச காலமாகத் திடீரென்று விலைவாசிகள் உயர ஆரம்பித்திருப்பது கவலையைக் கொடுக்கக்கூடிய விஷயமாகும். இப்படியே விலைகள் ஏறிக்கொண்டு போனால், பின்னர் அது எதில் வந்து முடியுமோ, சொல்லுவதற்கில்லை. இதற்கெல்லாம் காரணம் ஆலை முதலாளிகள், ஜவுளி வியாபாரிகள் இவர்களின் மாயாஜால வேலைகளே என்பது ருஜுவாகி விட்டது. அவர்கள் யோக்கியமாக நடந்து கொள்வார்கள், வீடு எரியும் போது சுருட்டுப் பற்ற வைக்க மாட்டார்கள் என்ற நம்பிக்கையின் மீதே இந்திய சர்க்கார் ஜவுளிக் கட்டுப்பாட்டை ரத்துச் செய்தார்கள். தாங்கள் யோக்கியமாக நடந்து கொள்வதாய் ஜவுளி முதலாளிகளும் உறுதி கூறினர். ஆனால் அவர்கள் தங்களுடைய வாக்குறுதியைக் காற்று வாக்கில் விட்டு விட்டுக் கொள்ளை லாபம் தட்ட ஆரம்பித்து விட்டார்கள்; சுதந்திர இந்தியாவில் தங்களுடைய கடமையைச் செய்யத் தவறி விட்டார்கள்; பாகிஸ்தானுக்கும் ஹைதராபாத்துக்கும் திருட்டுத்தனமாக ஜவுளிகளை அனுப்ப ஆரம்பித்து விட்டார்கள். துணிகளின் விலை அபரிமிதமாக ஏறி விட்டதால், மற்ற உணவுப் பொருள்களின் விலைகளையும் உயர்த்துவது மற்றவர்களுக்குச் சுலபமாகியது. எனவே உணவுப் பொருள்களின் விலைகள் முன்பிருந்த கண்ட்ரோல் விலைகளைக் காட்டிலும் இரண்டு மடங்குக்கு மேல் அதிகமாகி விட்டன.

மீண்டும் ஜவுளிக் கட்டுப்பாட்டை அமுலுக்குக் கொண்டு வருமாறு சில மாகாண சர்க்கார்கள் வற்புறுத்தி வருகின்றனர் என்று தெரிகிறது. கட்டுப்பாடு முறைகளால் பல விபரீதங்கள் ஏற்படுகின்றன என்பதற்காகவே அவற்றை ரத்துச் செய்தார்கள். தவிர மகாத்மா காந்தியின் கண்டிப்பான கட்டளைக்கு இணங்கவே, கட்டுப்பாடு முறைகளை நாளடைவில் அறவே ரத்துச் செய்து விடுவதென்று இந்திய சர்க்காரும் மாகாண சர்க்கார்களும் பிரகடனம் செய்தனர். அப்படியிருக்க மீண்டும் கண்ட்ரோல் முறையை அமுலுக்குக் கொண்டு வருவது சர்க்காருக்குப் பெருமையல்ல. எனவே சமீபத்தில் டில்லியில் நடக்கப் போகும் செலவு ஆலோசனைக் கமிட்டி அங்கத்தினர்களும் இந்திய சர்க்கார் பிரதிநிதிகளும் அடங்கிய மகாநாட்டில், ஆலை முதலாளிகளின் கொள்ளையைத் தடுப்பதற்கான கடுமையான நடவடிக்கைகளைக் கைக்கொண்டு ஜவுளி விலை குறைய வழி செய்வார்கள் என்று நம்புகிறோம். பொதுவாக மற்றச் சாதனங்களின் விலைகளும் குறைவது, இந்திய சர்க்கார் அவ்விஷயத்தில் பெறும் வெற்றியையே பொறுத்திருக்கிறது.

- சாஸ்திரி









...இருபத்து நாலுமணி நேரம்கூடப் போதாமல் அலுவல்கள் இருந்தாலும்,
புத்தகம் படிக்க மாத்திரம் எப்படியோ
கொஞ்சம் காலம் கிடைத்து விடும்.

SHASTRY

# வருக! வருக!

பாரத நாட்டின் முடிசூடா மன்னரை வணங்கி வரவேற்கிறோம். பன்னிரண்டு வருஷம் கடுஞ் சிறையில் தவம் புரிந்த தேசபக்த வீரரைப் பரிந்து வரவேற்கிறோம். இராஜபோகத்தைத் துறந்து தியாக வாழ்க்கையை மேற்கொண்ட தீரரை உவந்து வரவேற்கிறோம். ஆயிரம் ஆண்டுகள் அடிமைப் பட்டிருந்த இந்திய மக்களைச் சுதந்திர புருஷர்களாக்கிய மகா புருஷரை வரவேற்கிறோம். இந்திய சுதந்திர சர்க்காரின் முதற் பிரதம மந்திரியை வரவேற்கிறோம். மோதிலாலின் புதல்வரை, கமலா நேருவின் கணவரை, விஜயலக்ஷ்மியின் சகோதரரை வாழ்த்தி வரவேற்கிறோம். ஓடி ஓடி நாட்டுக்கு உழைப்பவரை, முப்பது கோடி மக்களின் ஒப்பிலாத் தலைவரைக் களிகூர்ந்து வரவேற்கிறோம்.

• • •

பகீரதன் மாதவம் புரிந்து பூலோகத்துக்குக் கங்கையைக் கொண்டு வந்தான். காங்கிரஸ் மகாசபை பகீரதப் பிரயத்தனம் செய்து இந்தியாவுக்குச் சுதந்திரம் கொண்டு வந்தது.

தேவாசுரர்கள் பாற் கடலைக் கடைந்து அமிர்தத்தை அடைந்தார்கள். ஆனால் அமுதம் எழுவதற்கு முன்னால் கிளம்பிய ஆலகால விஷம் புவனத்தை அழித்து விடாமல் சிவபெருமான் தலையிட்டார்: விஷத்தை உண்டு பிரபஞ்சத்தைக் காப்பாற்றினார். அதுபோலவே காந்தி மகாத்மா துவேஷமான விஷத்தை உண்டு நம்மைக் காப்பாற்றி விட்டுத் தாம் வானுலகம் எய்தினார்.

காங்கிரசும் காந்தி மகானும் இந்தியாவுக்கு அளித்த சுதந்திரத்தைக் காப்பாற்றும் பொறுப்பு மோதிலால் தந்த ரத்தினமாகிய ஜவாஹருக்கு ஏற்பட்டிருக்கிறது. அந்தப் பொறுப்பை அவர் நிர்வகிக்கக் கூடியவர் என்பதில் ஐயம் உண்டோ?

காந்தி மகான் ஜவாஹரைப் பற்றிச் சொல்லியிருப்பதைக் கேளுங்கள்:

"ஜவாஹர்லால் மனித குலத்தின் மாணிக்கம். அவரைப் பெற்ற நாடு பாக்கியம் செய்ததாகும். தைரியத்திலோ, நெஞ்சு உறுதியிலோ அவரை மிஞ்சக் கூடியவர்கள் யாரும் இல்லை. அவரைவிடச் சிறந்த தேசபக்தராக வேறு யாரைச் சொல்லமுடியும்? ஒரு போர் வீரனுக்கு வேண்டிய துணிச்சலும் தீரமும் அவருக்கு இருக்கிறது; அத்துடன் ஒரு ராஜ தந்திரிக்குரிய புத்திக் கூர்மையும் அவரிடம் இருக்கிறது. அவர் ஸ்படிகம் போலத் தூய்மையானவர். சந்தேகத்துக்கே அவர் இடம் வைப்பதில்லை. தேசம் அவருடைய கையில் பத்திரமாயிருக்கும்.

நேரு இல்லாமல் நான் எதுவும் செய்ய முடியாது. நான் இல்லாமல் நேரு எதுவும் செய்ய முடியாது. எங்கள் இருவருக்குமிடையே அவ்வளவு இதய ஒற்றுமை இருக்கிறது. அந்த ஒற்றுமையைக் குலைக்க எதனாலும் முடியாது. பண்டித ஜவாஹர்லால் நேரு என்னுடைய சட்டபூர்வமான வாரிசு ஆவார். நான் இந்த உலகை நீத்த பிறகு நான் இப்போது செய்து வரும் எல்லா வேலைகளையும் அவரே ஏற்றுக் கொண்டு செய்வாரென்று நிச்சயமாக நம்புகிறேன்."

• • •

சென்ற வருஷம் இந்தியா பூரண சுதந்திரம் பெறுமுன் லார்டு மவுண்ட்பாட்டன் இங்கிலாந்துக்குச் சென்றிருந்தார். அப்போது அங்கு பிரிட்டிஷ் பிரமுகர்களின், பிரபல பத்திரிகாசிரியர்களின் அந்தரங்கக் கூட்டம் ஒன்று நடந்தது.

"பண்டித ஜவாஹர்லால் நேருவைப் பற்றி உங்களுடைய அந்தரங்க அபிப்பிராயம் என்ன?" என்று ஒரு பிரபல பத்திரிகாசிரியர் லார்டு மவுண்ட் பாட்டனைக் கேட்டார்.

அதுவரையில் தமாஷாகச் சிரித்துக் கொண்டு பேசிய லார்டு மவுண்ட் பாட்டனின் முகத்தில் ஒரு வித உணர்ச்சிப் பெருக்குத் தோன்றியது.

"பண்டித ஜவாஹர்லால் நேரு பிறவியிலேயே பெரிய மனிதர்" என்றார்.

ஜவாஹர்லால்ஜியைப் பற்றிப் பல்வேறு அபிப்பிராயம் கொண்ட பல பிரிட்டிஷ் பிரமுகர்கள் அந்தக் கூட்டத்தில் இருந்தனர். லார்டு மவுண்ட்பாட்டனின் அபிப்பிராயம் அவர்களுடைய மனதை மாற்றி விட்டது.

• • •

சரித்திர ரதத்தின் சக்கரங்கள் சுழன்று சுழன்று வருகின்றன என்று ஆங்கிலத்தில் ஒரு பழமொழி உண்டு.

பெண் மோகம் காரணமாக இலங்கையின் மன்னன் இராவணன் அழிந்தான். வீர நெப்போலியனின்

வாழ்க்கை பேராசையால் பரிதாபகரமாக முடிந்தது. தோல்வி என்பதையே அறியாத மகா அலெக்ஸாண்டரும் நிலைக்கால் வைத்தபடியால் அழிவைத் தேடிக் கொண்டான். அவுரங்கஜீப்பின் சாம்ராஜ்யம் மதவெறி காரணமாகச் சீர்குலைந்து சிதைந்து போயிற்று.

மூர்க்கத்தனத்தினாலும் மூடப் பிடிவாதத்தினாலும் சகுனியின் துர்ப்போதனையினாலும் துரியோதனன் சகலத்தையும் இழந்தான்.

உலகத்து அரசியலிலும் சரி இந்தியாவிலும் சரி, இன்றைக்கும் இராவணர்கள், துரியோதனர்கள், நெப்போலியர்கள், அலெக்ஸாண்டர்கள், அவுரங்கஜீப்புகள் இருந்து வருகிறார்கள்.

அடிமை அரக்கன் அழிந்து விட்டான். எனினும் அவனது உதிரத்திலிருந்து ஆயிரத்தெட்டு அரக்கர்களும் ரஸாக்கர்களும் கிளம்பி யிருக்கின்றனர்; ஆயிரத்தெட்டு பிரச்னைகள் கிளம்பி நம் நாட்டைத் தொல்லைப் படுத்தி வருகின்றன. அவர்களை யெல்லாம் எதிர்த்து நின்று இந்தியா அடைந்த சுதந்திரத்தைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்.

இந்நிலைமையில் இந்திய மக்களுக்குத் தலைமை வகிக்கக்கூடிய சகல தகுதிகளும் வாய்ந்தவர் பண்டித ஜவாஹர்லால் நேரு. பாரதப் போரில் பஞ்ச பாண்டவர்களின் கட்சியில் அர்ச்சுனன் வகித்து வந்த ஸ்தானத்தை இந்தியாவின் அரசியலில் ஜவாஹர்லால்ஜி வகித்து வருகிறார்.

பாரதப்போர் ஆரம்பித்த போது பார்த்தனின் சரீரம் மனம் எல்லாம் சோர்வு அடைந்தன. ஆனால் இன்றோ பண்டிதரின் சரீரம் சிறிது சோர்வுற்றிருக்கிறதே யன்றி மனம் என்னளவும் சோர்வு அடையவில்லை. எவ்வளவு பயங்கரமான பிரச்னைகளாயினும், பாரதத் தலைவர் அவைகளை வெற்றிகரமாகச் சமாளிக்கும் உறுதியும் திறனும் வாய்க்கப் பெற்றுள்ளார்.

*

சென்ற வருஷம் பாரத புண்ணிய பூமியில் சுதந்திரோதயம் ஆயிற்று. அந்த உதய சூரியனை வரவேற்று வணங்கிய போது பண்டித ஜவாஹர்லால் நேரு கூறிய மொழிகளை யாரும் மறக்கக் கூடாது.

"இந்தியாவில் சுதந்திரம் உதயமாகியிருக்கிறது. இது உலகம் முழுவதற்குமே ஒரு புதிய நம்பிக்கையை ஊட்டக் கூடிய சுப தினமாகும். எனினும் நமது கடமை இத்துடன் முற்றுப் பெறவில்லை. நாம் செய்து முடிக்க வேண்டிய கடினமான காரியங்கள் இனித்தான் வரப்போகின்றன.

நமது போராட்டமும் இத்துடன் முடியவில்லை. வறுமையையும் பிணியையும் அறியாமையையும் எதிர்த்துப் போராடி வெற்றி பெற வேண்டும்."

பாரத மக்கள் செய்ய வேண்டிய கடமைகளில் தற்சமயம் முக்கியமானது, பெரும் பொறுப்பை ஏற்றிருக்கும் நமது அரும்பெரும் தலைவர்களை ஆதரித்து நிற்பதுதான்; அவர்களுடன் பூரணமாக ஒத்துழைப்பதுதான்.

அவ்வாறு ஒத்துழைக்கப் போகிறோம் என்பதை, இந்திய முடிசூடா மன்னருக்குத் தமிழ் மகாஜனங்கள் அமோகமான வரவேற்பு அளிப்பதன் மூலம் நிரூபிப்பார்கள் என்று நம்புகிறோம்.

ஒளிபடைத்த கண்ணினாய் வா வா வா
உறுதிகொண்ட நெஞ்சினாய் வா வா வா
களிபடைத்த மொழியினாய் வா வா வா
கடுமைகொண்ட தோளினாய் வா வா வா
தெளிவுபெற்ற மதியினாய் வா வா வா
சிறுமை கண்டு பொங்குவாய் வா வா வா
எளிமை கண்டு இரங்குவாய் வா வா வா
ஏறு போல் நடையினாய் வா வா வா

இளைய பாரதத்தினாய் வா வா வா
எதிரிலா வலத்தினாய் வா வா வா
ஒளியிழந்த நாட்டிலே நின்றேறும்
உதய ஞாயிறொப்பவே வா வா வா
களையிழந்த நாட்டிலே முன்போலே
கலை சிறக்க வந்தனை வா வா வா
விளையுமாண்பு யாவையும் பார்த்தன் போல்
விழியினால் விளக்குவாய் வா வா வா

# அதிசய மனிதர் அழகப்பர்

டாக்டர் அழகப்பச் செட்டியார் ஒரு அதிசய மனிதர். அவர் பம்பாய்க்கு ஒரு தடவை போயிருந்தார். மேனாட்டு முறையில் நடத்தப்பட்ட ரிட்ஸ் ஹோட்டலுக்குச் சென்றார். "தங்குவதற்கு அறை வேண்டும்" என்று கேட்டார். அழகப்பச் செட்டியாரை ஏற இறங்கப் பார்த்து விட்டு மேற்படி ஹோட்டல் மானேஜர், "அறை காலி இல்லை" என்றான். "நன்றாய்ப் பார்த்துச் சொல்!" என்றார் அழகப்பச் செட்டியார். "பார்த்துத்தான் சொல்கிறேன்" என்றான் மானேஜர். "இந்த ஹோட்டலில் எத்தனை அறைகள் இருக்கின்றன!" என்று அழகப்பச் செட்டியார் கேட்டார். "நீர் என்ன ஹோட்டலை விலைக்கு வாங்கப் போகிறீரா?" என்று மானேஜர் கேட்டான். "ஆமாம், விலைக்கு வாங்கத்தான் போகிறேன்! என்ன விலை?" என்று அழகப்பச் செட்டியார் கேட்டார். லட்சக்கணக்கில் ஏதோ ஒரு தொகை அவன் சொன்னான். "சரி; இப்போதே அட்வான்ஸ் வாங்கிக் கொள்!" என்றார் அழகப்பச் செட்டியார்.

மானேஜர் திகைத்துப் போனார். கடைசியில் அந்த ரிட்ஸ் ஹோட்டலை டாக்டர் அழகப்பச் செட்டியார் விலைக்கு வாங்கியே விட்டார்!

வியாபார விஷயத்திலேதான் இப்படியென்றால், தர்மங்கள் செய்யும் விஷயத்தில் டாக்டர் அழகப்பரின் காரியம் ஒவ்வொன்றும் நம்மைத் தூக்கி வாரிப் போடுவதாகவே இருக்கிறது

சென்ற வருஷத்தில் வைஸ் சான்ஸலர் லக்ஷ்மணசாமி முதலியார் "ஒரு லட்சம் ரூபாய் ரொக்க நிதி ஏற்படுத்தினால் ஒரு ஆர்ட்ஸ் காலேஜ் ஆரம்பிக்கலாம்!" என்று சொன்னார்.

"இந்தாருங்கள் ஒரு லட்சம்! காரைக்குடியில் ஒரு காலேஜ் ஆரம்பிக்கலாம்!" என்றார் அழகப்பர். சொல்லிச் சில நாளைக்கெல்லாம் காரைக்குடியில் காலேஜ் ஆரம்பமாகி விட்டது.

"வாடகைக் கட்டிடத்தில் எத்தனை நாள் காலேஜ் நடத்துவது? காலேஜுக்குச் சொந்தக் கட்டிடம் வேண்டும்!" என்று அவர் எண்ணினார்.

காரைக்குடிக்குப் பக்கத்தில் அறுநூறு ஏக்கரா நிலத்தை வாங்கினார். அதில் 150 ஏக்கரா நிலத்தை மேற்படி காலேஜுக்கு என்று எழுதிவைத்தார்.

அவ்வளவு விஸ்தாரமான நிலம் வைத்திருக்கும்போது அதற்குத் தகுந்த விஸ்தாரமான கட்டிடம் கட்ட வேண்டாமா?

அழகப்ப செட்டியார் காலேஜ் கேவலம் அற்ப சொற்பமாயிருக்கலாமா? வெறும் பி. ஏ. வகுப்பு மட்டும் போதுமா? பி. எஸ். ஸி., பி. காம். பி. ஏ. ஆனர்ஸ் எல்லாம் வேண்டாமா? பௌதிகம், இரசாயனம், தாவர நூல் முதலிய எல்லா வகுப்புக்களும் வேண்டாமா?

கட்டடம் வேண்டியது தான். அதற்குப் பணம் எவ்வளவு ஆகும்?

முதலில் மூன்று லட்சம் வேண்டும் என்று திட்டம் போட்டார்கள். மூன்று லட்சம் ஐந்து லட்சமாயிற்று. பிறகு ஒன்பது லட்சத்தில் வந்து நின்றது!

அவ்வளவும் அழகப்ப செட்டியார் கொடுத்தார்; ரொக்கமாகவும் கொடுத்தார்; சொத்துக்களாகவும் கொடுத்தார்.

"வெறும் ஆர்ட்ஸ் காலேஜுகளைப் பெருக்கி பி. ஏ.க்களை உற்பத்தி செய்து தள்ளுவதில் என்ன பிரயோஜனம்?" என்று சிலர் சொன்ன வார்த்தை டாக்டர் அழகப்பரின் காதில் விழுந்தது.

இந்த சமயத்தில் இந்தியாவின் சுதந்திர சர்க்கார் சென்னை மாகாணத்தில் ஒரு பெரிய மின்சார — ரசாயன ஆராய்ச்சிக்கூடம் ஆரம்பிக்கப் போகிறார்கள் என்றும் தெரிந்தது.

"முந்நூறு ஏக்கரா நிலம் கொடுக்கிறேன். பதினைந்து லட்சம் நன்கொடையும் தருகிறேன். காரைக்குடியில் ஆரம்பியுங்கள்!" என்று அழகப்பர் சொன்னார்.

இந்திய சர்க்காரின் விஞ்ஞான இலாகா காரியதரிசி டாக்டர் பட்நகர் காரைக்குடிக்கு வந்து பார்த்தார். "நிலம் இருக்கிறது; சரிதான்! தண்ணீர் வசதி இல்லையே?" என்றார்.

உடனே பூமிக்கு அடியிலே இருநூறு அடி முந்நூறு அடி ஆழம் போய்த் தண்ணீரை வெளியில் கொண்டுவரக் கூடிய போர் பம்பிங் இயந்திரத்தை அழகப்பச் செட்டியார் கொண்டுவந்தார்.

பூமிக்குள்ளே ஆழமாய்க் குடைந்ததும் தண்ணீர் பொங்கிக் கொண்டு வந்து வெள்ளமாய்ப் பெருகிற்று!

ஆகவே டாக்டர் பட்க்கரின் ஆட்சேபணை அடிபட்டுப் போய் விட்டது!

• • •

அறுநூறு ஏக்கரா நிலத்தில் நானூற்றைம்பது ஏக்கரா போகப் பாக்கி நூற்றைம்பது ஏக்கரா இருக்கிறதே,—அதை என்ன செய்கிறது என்ற கவலை அழகப்பரைத் தொல்லைப் படுத்தியது. அதற்கும் ஒரு வழி சீக்கிரத்திலேயே அவர் கண்டு பிடித்தார்.

நாட்டுக்கு இப்போது வேண்டிய முக்கியமான கல்வி என்ன? என்ஜினியரிங் கல்வி அல்லவா?

மீதம் உள்ள நூற்றைம்பது ஏக்கரா நிலத்தில் ஒரு முதல்தர என்ஜினியரிங் காலேஜ் ஆரம்பித்து விடவேண்டியது தான். அதற்கு, எத்தனை பணம் வேண்டும்? பத்து லட்சம் ரூபாய்தானே? சரி!

இப்போது அழகப்பச் செட்டியார் காரைக்குடியில் என்ஜினியரிங் காலேஜ் ஆரம்பிப்பதற்காகப் பத்து லட்சம் ரூபாய் சேகரம் செய்து கொண்டிருக்கிறார்!

• • •

இப்படியெல்லாம் மூச்சுத் திணறிப் போகும்படியாகக் கல்வி தர்மம் செய்து வரும் டாக்டர் அழகப்ப செட்டியார் தமிழ்நாட்டுக்கு இன்றொரு மகத்தான பெருபகாரம் புரிந்திருக்கிறார்.

காரைக்குடியில் ஸ்தாபனமாகிற மின்சார—ரசாயன ஆராய்ச்சிக் கூடத்துக்கு அஸ்திவாரக்கல் நாட்டப் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேருவை அழைத்து வந்திருக்கிறார்.

எத்தனையோ முக்கியமான தேசிய, சர்வதேசிய வேலைகளில் மூழ்கிக் கிடக்கும் ஜவாஹர்லால்ஜியைத் தில்லியிலிருந்து சென்னைக்கு வரவழைப்பது என்பது இலேசான காரியமா?

சாதாரணமாக, அசாத்தியமான காரியம் என்றே அதைச் சொல்லலாம்.

ஆனால் டாக்டர் அழகப்பாவுக்கு அது அசாத்தியமான காரியம் அன்று.

அழகப்பர் நேருஜியைக் கைப்பிடியாகப் பிடித்துக் கொண்டு வருகிறார்.

சென்னையிலும் காரைக்குடியிலும் லட்சக் கணக்கான தமிழ் மக்களுக்கு ஜவாஹர்லால்ஜியைத் தரிசிக்கும் பாக்கியம் கிடைக்கப் போகிறது. ஜவாஹர்லாலின் பொன் மொழிகளைக் கேட்கும் பேறும் கிட்டப் போகிறது.

தமிழ் மக்களின் சார்பாக டாக்டர் அழகப்பச் செட்டியாருக்கு மனமார்ந்த நன்றி செலுத்துகிறோம். இதுபோல் இன்னும் பல திடுக்கிடும் தர்மங்களையும் மனிதருக்கு உபகாரங்களையும் செய்யும் பேற்றை அவருக்கு அருள் புரியுமாறு இறைவனைப் பிரார்த்திக்கிறோம்.

---

# ஆகாச வெடி

கோயில் மணிகளைத் திருடியதாகத் தொடரப்பட்ட வழக்கில் திருடனுக்கு மூன்று மாதக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது.

—ராமநாதபுரம் செய்தி.

மேற்படி திருடன் மணிகளை அடித்துக் கொண்டு போனபோது அந்த மணிகளும் அடித்துக் கொண்டதால் தான் பிடிபட்டிருப்பானோ?

★

சென்னையைச் சேர்ந்த முந்நூறு வண்டி இழுக்கும் தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்துள்ளனர். முதலாளிகளுக்கும் தொழிலாளிகளுக்கும் இடையே உள்ள தகராறே வேலை நிறுத்தத்தின் காரணம்.

—பத்திரிகைச் செய்தி.

இந்தச் சச்சரவை இழுக்க விடாமல் சட்டென்று ஒரு முடிவுக்கு வருவது நலம்.

“தன்னுடைய வக்கீல் இருக்கையில் ஜூரோ தம் வாய்க்கு வந்தபடி பேசக் கூடாது” என்று பரமானந்த் கூறினார்.

—செய்தி.

வாய்க்கு வந்தபடி பேசுவது வக்கீல்களின் தனி உரிமை போலும்!

★

வரப்போகும் சென்னை கார்ப்பரேஷன் தேர்தலில் காங்கிரஸ் அபேட்சகருக்கு மஞ்சள் வர்ணமும், முஸ்லிம் லீகுக்குப் பச்சையும், கம்யூனிஸ்டு கட்சிக்குச் சிவப்பும் கொடுக்க வேண்டும் என்று சர்க்கார் உத்தரவு செய்திருக்கிறது.

—செய்தி.

காங்கிரசுக்கு எதிராக நிற்கும் கட்சிகள் தேர்தலுக்கு முன் எந்த வர்ணத்தைப் பூசிக் கொண்டாலும், தேர்தல் முடிவு வெளியானதும் முகத்தில் கரியைப் பூசிக் கொள்ளப் போகின்றன என்பதில் சந்தேகமில்லை.



காதல் மனைவி (கமலா நேரு)



செல்வப் புதல்வி (இந்திரா பிரியதர்சினி)




### முப்பத்துமூன்றாம் அத்தியாயம்

## அத்தையும் மருமகனும்

சூரியா சற்று நேரம் அல்லிக் குளத்தையும் அதற்கப்பா விருந்த சவுக்கமரத் தோப்பையும் பார்த்துக் கொண்டிருந்து விட்டுக் கூறினான்:—

"பார்க்கப் போனால், அப்படியொன்றும் பிரமாத விஷயம் இல்லை. வருத்தப்படுவதற்கு அவசியமும் இல்லை. மொட்டைக் கடிதம் என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களா? அதாவது கையெழுத்து, காலெழுத்து ஒன்றும் இல்லாத கடிதம். பொறாமையினாலும் துவேஷத்தினாலும் நல்ல காரியத்தைக் கெடுப்பதற்காகச் சிலர் அப்படிக் கடிதம் எழுதுவதுண்டு. அந்த மாதிரி கடிதம் ஒன்று உங்களுக்கு வந்திருந்தது, அத்தை! அதை அந்தத் தபால்கார பாலகிருஷ்ணன் பிரித்துப் படித்துக் கொண்டிருந்தான். பெரிய போக்கிரி அவன். அதனாலேதான் அவனோடு சண்டை போட்டேன்."

"நான்கூட அந்தப் பையனை இங்கே அடிக்கடி பார்த்திருக்கிறேன்! நல்ல பிள்ளையாய்த் தோன்றினானே! அவன் விஷயம் இருக்கட்டும். தபால்கார பாலகிருஷ்ணன் நல்லவனாயிருந்தால் நமக்கென்ன? பொல்லாதவனாயிருந்தால் நமக்கென்ன? ...... கடிதத்தில் என்ன எழுதியிருந்தது, சூரியா! அதைச் சொல்லு!"

"என்னமோ கன்னாபின்னா என்று எழுதியிருந்தது! அதைச் சொல்லத்தான் வேண்டுமா, அத்தை!"

"யாரைப் பற்றி எழுதியிருந்தது? உன் அத்திம்பேரைப் பற்றியா? அல்லது என்னைப் பற்றியா?"

"இல்லே, அத்தை! உங்கள் இருவரைப் பற்றியு மில்லே!"

"அப்படியானல் சீதாவைப் பற்றியா? எந்தப் பாவி என்ன எழுதியிருந்தான்?......" என்று ராஜம்மாள் கூறியபோது அவளுடைய குரலில் கோபம் கொதித்தது: முகத்தில் ஆக்ரோஷம் பொங்கியது.

"இல்லே, இல்லே! சீதாவைப் பற்றியும் இல்லே. சீதாவைப் பற்றி எழுத என்ன இருக்கிறது? என்ன எழுத முடியும்? அத்தை! நீங்கள் எவ்வளவோ கஷ்டங்களே அநுபவித்திருக்கிறீர்கள் என்று எனக்குத் தெரியும். ஆனாலும் சீதாவைப் போன்ற ஒரு பெண்ணே நீங்கள் பெற்றது உங்களுடைய பாக்யந்தான்!"

ராஜம்மாளின் முகம் மறுபடியும் மலர்ந்தது. "சீதாவைப் பற்றியும் ஒன்றும் இல்லையா? பின்னே யாரைப் பற்றி என்ன எழுதி யிருந்தது?" என்று கேட்டாள்.

"சீதாவுக்கு வரன் பார்த்து முடிவு செய்திருக்கிறோமே, அந்த மாப்பிள்ளையைப் பற்றித்தான் எழுதி யிருந்தது!"

"என்ன சூரியா! மாப்பிள்ளையைப் பற்றி என்ன எழுதி யிருந்தது?" என்று ராஜம்மாள் பரபரப்போடு கேட்டாள்.

"அதைச் சொல்லுவதற்கே எனக்குக் கஷ்டமா யிருக்கிறது, அத்தை! ஆனாலும் உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டியதுதானே? ராகவன் பம்பாயிலே ஏற்கெனவே ஒரு பெண்ணுடன் சிநேகம் வைத்துக் கொண்டிருந்தானும். அவள் ஒரு நாள் பத்மாபுரத்துக்கு வந்து அவனேடு சண்டை போட்டு ரகளே பண்ணி விட்டாளாம். ஊரெல்லாம் சிரித்ததாம். இன்னும் அவன் இப்படிப்பட்டவன், அப்படிப்பட்டவன், — அவனுக்குப் போய்ப் பெண்ணேக் கொடுக்கலாமா என்று எழுதியிருந்தது."

ராஜம்மாள் பெருமூச்சு விட்டாள். சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்திருந்தாள். பின்னர், "இவ்வளவுதானு? இன்னும் ஏதாவது உண்டா?" என்று கேட்டாள்.

"மாப்பிள்ளேயின் தாயாரையும் தகப்பனுரையும் பற்றிக் கேவலமாய் எழுதி யிருந்தது. அந்தப் பிராமணர் ரொம்பப் பணத்தாசை பிடித்தவராம். அந்த அம்மாள் ரொம்பப் பொல்லாதவளாம். முதல் நாட்டுப் பெண்ணே ரொம்பப் படுத்தியபடியால் அவள் பிறந்த வீட்டோடு போய்விட்டாளாம். பிற்பாடு அவள் புருஷனும் அவளோடு போய்விட்டானும். இப்படிப்பட்ட சம்பந்தம் உங்களுக்கு எதற்காக என்று எழுதியிருந்தது."

ராஜம்மாள் மறுபடியும் சிறிது நேரம் யோசனை செய்து விட்டு, "சூரியா! இன்னும் ஏதாவது உண்டா?" என்றாள்.

"வேறு முக்கியமாக ஒன்றும் இல்லே. 'இந்தமாதிரி இடத்தில் பெண்ணேக் கொடுப்பதை விடக் கிணற்றிலே பிடித்துத் தள்ளிவிடலாம்' என்றும் 'கிளியை வளர்த்துப் பூனையிடம் கொடுக்க வேண்டாம்' என்றும் இம்மாதிரி ஒரே பிதற்றலாக எழுதி யிருந்தது. அத்தை! உங்கள் பெயருக்கு இனிமேல் கடிதம் வந்தால் என்னிடமே கொடுக்கும்படி பாலகிருஷ்ணனிடம் சொல்லி யிருக்கிறேன். நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்? இனிமேல் கடிதம் வந்தால் உங்களிடமே கொடுக்கச் சொல்லி விடட்டுமா?"

"சூரியா! உனக்கு வயது அதிகமாகாவிட்டாலும், நல்ல யோசனைக்காரனு யிருக்கிறாய். மன்னிகூட அடிக்கடி இதைப்பற்றிச் சொல்லிச் சந்தோஷப் படுகிறாள். 'என் மூத்த பிள்ளை கங்காதரன் ஒரு மாதிரிதான். அவனுக்குக் குடும்ப விஷயத்தில் அவ்வளவு அக்கரை போதாது. தங்கைக்குக் கலியாணம் நாலு நாள்தான் இருக்கிறது. 'இன்னும் வந்து சேரவில்லே, பாருங்கள்! அடுத்தாற்போல் சூரியா எவ்வளவு பொறுப்பாக எல்லாக் காரியமும் செய்கிறான்!' என்று இன்றைக்குக் காலையில்கூட உன் அம்மா சொல்லிச் சந்தோஷப் பட்டாள். உன் அம்மா சொன்னது ரொம்ப சரியான விஷயம். நீ முன் யோசனைக்காரன். ஆகையால் உன்னிடந்தான் நானும் யோசனை கேட்க வேண்டும் என்று இருந்தேன். இந்தக் கடிதத்தைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய், சூரியா? அதில் உள்ளது எல்லாம் உண்மையாக இருக்குமென்று உனக்

குத் தோன்றுகிறதா?" என்று கேட்டாள் ராஜம்மாள்.

"நான் அப்படி நினைக்கவில்லை, அத்தை! யாரோ பொறாமை காரணமாக எழுதியிருப்பதாகவே நினைக்கிறேன். அதற்காகக் கலியாணத்தைத் தடங்கல் செய்வது சரியல்ல என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. நீங்கள் என்ன நினைக்கிறீர்களோ, என்னமோ? மேலும் அத்திம்பேருக்கு இதெல்லாம் தெரிந்தால் என்ன சொல்வாரோ, என்னமோ? அவர் இன்னும் வந்து சேரவில்லையே!"

"அத்திம்பேரிடமிருந்து நாலு நாளைக்கு முன்னால் கடிதம் வந்தது. கலியாணத்துக்கு முதல் நாள் வந்து சேர்ந்து விடுவதாக எழுதியிருக்கிறார். டில்லியில் மாப்பிள்ளையைப் பற்றி விசாரித்தாராம். மிகவும் திருப்திகரமாய்ச் சொன்னார்களாம். ரொம்ப கெட்டிக்காரன் என்று பெயர் வாங்கியிருப்பதாகவும் மேல் உத்தியோகஸ்தர்களுக்கு மாப்பிள்ளை பேரில் ரொம்பப் பிரியம் என்றும் சம்பளம் இரண்டாயிரம் ரூபாய் வரையில் ஆகும் என்றும் சொன்னார்களாம்."

"அத்தை! நான் சொன்னது சரிதானே? யாரோ பொறாமைக்காரர்கள்தான் இப்படியெல்லாம் எழுதியிருக்க வேண்டும் அல்லவா?"

"இந்தக் காலத்தில் நல்ல வரன் கிடைப்பது எவ்வளவோ கஷ்டமாயிருக்கிறது. எத்தனையோ பேர் இப்படிப்பட்ட நல்ல வரனுக்குப் பெண்ணைக் கொடுக்க வந்திருப்பார்கள். கலியாணம் நிச்சயம் ஆகாதபடியால் அவர்கள் பொறாமைப் பட்டு இப்படி எழுதியிருக்கலாம்."

"அப்படித்தான் இருக்கும்; சந்தேகமேயில்லை."

"மாமியார், மாமனார் விஷயங்கூட விசாரித்தேன். காமாட்சி அம்மாள் பேரில் ஒரு பிசகும் இல்லை என்றும் மூத்த நாட்டுப் பெண்தான் ரொம்பப் பொல்லாதவள் என்றும் தெரிந்தது. புருஷன் வீட்டில் இருக்க மாட்டேன் என்று சொல்லிவிட்டு எப்போது பிறந்தகத்துக்குப் போனாளோ, அப்போதே குணம் சரியில்லை என்று தெரியவில்லையா? 'என்னோடு வந்து எங்க அப்பா வீட்டில் இருந்தால் இரு; இல்லாவிட்டால் நீ எனக்குப் புருஷன் இல்லை' என்று சொல்லிவிட்டாளாம். அவள் எப்பேர்ப்பட்ட ராட்சஸியாயிருக்க வேண்டும்!"

"தாடகை - சூர்ப்பனகை போன்றவளாய்த்தான் இருப்பாள்!"

"ஒருவேளை அந்தப் பெண்ணே விஷமத்துக்காக இப்படியெல்லாம் யாரையாவது கொண்டு எழுதச் சொல்லியிருக்கலாம்."

"அப்படியும் இருக்கக் கூடும்."

"ஆகக்கூடி, கலியாணத்தை நடத்தி விட வேண்டும் என்றுதானே நீயும் நினைக்கிறாய், சூரியா!"

"கட்டாயம் நடத்தியேதான் தீர வேண்டும். இவ்வளவு ஏற்பாடு நடந்த பிறகு இனிமேல் ஒரு நாளும் பின் வாங்கக் கூடாது."

"அப்படியே அந்தக் கடிதத்தில் எழுதியிருப்பதில் ஏதாவது உண்மையிருந்தாலும் நான் என்ன செய்ய முடியும், சூரியா! இந்த உலகத்தில் நாமாகச் செய்யக் கூடியது என்ன இருக்கிறது? பகவானுடைய சித்தம் எப்படியோ அப்படித்தான் எதுவும் நடக்கும். சீதா இந்த உலகத்தில் சந்தோஷமாயும் சௌக்கியமாயும் இருக்க வேண்டும் என்று பராசக்தியின் சித்தம் இருந்தால் அப்படியே நடக்கும். இந்தக் கலியாணம் நடக்க வேண்டும் என்பது பகவானுடைய விருப்பமாயிருந்தால் அதை யாராலும் மாற்ற முடியாது."

"இதில் என்ன சந்தேகம், அத்தை! லலிதாவைப் பார்க்க வந்தவன் எப்போது சீதாவைக் கலியாணம் செய்து கொள்கிறேன் என்று சொன்னானோ, அதிலிருந்தே இது பகவானுடைய செயல் என்று ஏற்படவில்லையா!"

"என் மனதில் இருந்ததையே நீயும் சொன்னாய், சூரியா! அந்த இரண்டு மூன்று நாளும் எனக்கு எவ்வளவு குழப்பமாயிருந்தது தெரியுமா? மன்னியின் மனது வேதனைப்பட்டுப் போகிறதே என்று நினைத்து நினைத்து எனக்குத் தூக்கமே வரவில்லை. நீதான் எப்படியோ உன் அம்மாவின் மனதைத் தேற்றிச் சரிப்படுத்தினாய். நீ மட்டும் இங்கே இருந்திராவிட்டால் எல்லாம் ஒரே குழப்பமாய்ப் போய் விட்டிருக்கும். உன்னுடைய

அப்பாவுக்குக்கூட அன்றைக்கு ஆங்காரம் வந்து விட்டது. நீதான் அந்த வக்கீல் வீட்டுப் பிள்ளையைப் பற்றி உடனே எடுத்துச் சொல்லி அண்ணாவையும் சாந்தப்படுத்தினாய். நீ இங்கே வந்திராவிட்டால் எப்படி ஆகிப் போயிருக்கும்? இதைப் பற்றி யோசிக்க யோசிக்க என் மனதில் இதெல்லாம் பகவானுடைய சித்தத்தினால் நடைபெறுகிறது என்று நிச்சயம் ஏற்பட்டிருக்கிறது."

"யாரோ அசூயை பிடித்தவர்கள் மொட்டைக் கடிதம் எழுதுவதற்காகக் கடவுளுடைய விருப்பத்துக்கு நாம் தடங்கல் செய்யக் கூடாது."

"என் எண்ணமும் அதுதான், சூரியா! நீ அந்தத் தபால்காரப் பையன் பாலகிருஷ்ணனிடம் செய்திருக்கும் ஏற்பாடுதான் நல்லது. யார் யாரோ எழுதும் பொய்க் கடிதங்களைப் படித்து என் மனதைக் கெடுத்துக் கொள்வானேன்? என் பெயருக்கோ சீதா பெயருக்கோ வரும் கடிதங்களையெல்லாம் நீயே வாங்கிக் கொள். படித்து விட்டு எங்களிடம் கொடுக்கக் கூடியதாயிருந்தால் கொடு. இல்லாவிட்டால் கிழித்து எறிந்து விடு. இன்னும், உன் அப்பாவுக்கு வரும் கடிதங்களைக் கூட நீ வாங்கிப் பார்ப்பது நல்லது. எனக்கு எழுதியது போல் அண்ணாவுக்கும் யாராவது எழுதி, அவனுடைய மனது கலங்கிப் போகலாமல்லவா?"

"ஆம், அத்தை! அப்பாவுக்கு வரும் கடிதங்களைக் கூட நானே வாங்கிப் பார்ப்பது என்றுதான் எண்ணியிருக்கிறேன்."

"சூரியா! நீ செய்யும் உதவிக்கு நான் என்ன பதில் செய்யப் போகிறேன்! நீ சௌக்கியமாயிருக்க வேண்டும், உனக்குப் பெரிய உத்தியோகம் ஆகவேண்டும் என்று பகவானைப் பிரார்த்தனை செய்கிறேன்."

"பெரிய உத்தியோகமா? எனக்கா? அந்தமாதிரி ஆசையெல்லாம் எனக்குக் கிடையாது, அத்தை! நாம் பிறந்த தேசத்துக்காகப் பாடுபட வேண்டும், ஏழை எளியவர்களுக்கு உழைக்க வேண்டும் என்பதுதான் என் மனத்தில் உள்ள ஆசை. பெரிய உத்தியோகம் பண்ண வேண்டும் என்றோ, நிறையப் பணம் சம்பாதிக்க வேண்டும் என்றோ எனக்கு ஆசை கிடையாது. பரோபகாரத்துக்காகப் பாடுபடும் மனமும் சக்தியும் எனக்கு ஏற்படவேண்டும் என்று ஆசீர்வாதம் செய்யுங்கள், அத்தை!"

"சூரியா! நீ இந்த வயதிலேயே இவ்வளவு பரோபகாரியாயிருக்கிறாயே? பெரியவன் ஆகும்போது எவ்வளவோ பரோபகாரம் செய்வாய். ஆனால் நம்முடைய சொந்தக் காரியத்தையும் கொஞ்சம் பார்த்துக்கொள்ள வேண்டும்."

"அது சரிக்கட்டி வராது, அத்தை! சொந்தக் காரியத்தைக் கவனித்தால் பரோபகாரம் செய்ய முடியாது. பரோபகாரம் செய்தால் சொந்தக் காரியம் கெட்டுத்தான் போகும்!" என்றான் சூரியா.

சற்று நேரம் குளத்தங்கரைப் பங்களாவில் மௌனம் குடிகொண்டிருந்தது. அந்த மௌனத்தினிடையே சவுக்கு மரத் தோப்பில் காற்றுப் புகுந்து அடிக்கும் சத்தம் கடல் அலைச் சத்தத்தைப்போலக் கேட்டது.

"அத்தை! முன்னொரு நாள் இந்த அலை ஓசை போன்ற சத்தத்தைக் கேட்டு நீங்கள் பயந்தீர்கள். காரணம் அப்புறம் சொல்கிறேன் என்றீர்கள்" என்றான் சூரியா.

அப்போது ராஜம்மாளின் முகத்தை மேகத்திரை மறைப்பது போலத் தோன்றியது.

"சொல்லுகிறேன், சூரியா! இந்த நிமிஷத்தில் நானும் அதைச் சொல்ல வேண்டும் என்றே எண்ணினேன். இங்கே வருவதற்கு முன்னால் பம்பாயில் நான் வியாதிப் பட்டுப் படுக்கையாய்க் கிடந்தேன் அல்லவா? அப்போது சுர வேகத்தில் என்னவெல்லாமோ பிரமைகள் எனக்கு உண்டாகும். கனாத காட்சிகளையெல்லாம் காண்பேன். அவற்றில் சில காட்சிகள் இன்பமாயிருக்கும். சில பயங்கரமாயிருக்கும். நானும் சீதாவும் சமுத்திரக் கரையில் நிற்கிறோம். சீதா சமுத்திரத்தில் இறங்கிப் போகிறாள். 'போகாதேடி! போகாதே!' என்று நான் கத்துகிறேன். 'ஓ' என்ற அலை ஓசையினால் நான் கத்தும் குரல் அவள் காதில் விழவில்லை. மேலும் சமுத்திரத்தில் போய்க் கொண்டிருக்கிறாள்.

திடீரென்று ஒரு பெரிய அலை வந்து அவள்மேல் மோதுகிறது. அவளைக் காப்பாற்றுவதற்காக நானும் கடலில் இறங்குகிறேன். எனக்கு நீந்தத் தெரியுமல்லவா? அலைகளை எதிர்த்துச் சமாளித்துக் கொண்டு நீந்திப் போகிறேன். ஆனால் கண்ணுக் கெட்டிய தூரம் கடலும் அலையுமாயிருக்கிறதே தவிர, சீதா இருந்த இடமே தெரியவில்லை! அலைகளின் பேரிரைச்சலுக்கு மத்தியில் 'சீதா! சீதா!' என்று அலறுகிறேன். என்னுடைய கைகளும் களைத்துப் போய் விடுகின்றன. அந்தச் சமயத்தில் கையில் ஏதோ தட்டுப் படுகிறது. அது சீதாவின் கை தான். அவளுடைய கையைப் பிடிக்கிறேன். வளை உடைகிறது. கை நழுவப் பார்க்கிறது. ஆனாலும் நான் விடவில்லை. கெட்டியாய்ப் பிடித்துக் கொள்கிறேன்.... இம்மாதிரி பல தடவை கண்டேன், சூரியா! ஒவ்வொரு தடவையும் சீதாவின் கையைப் பிடித்துக் கொள்ளும் சமயத்தில் பிரக்ஞை வந்து விடும். அவ்வளவும் உண்மையாக நடந்தது போலவே இருக்கும். இன்னும் அதை நினைத்தால் எனக்குப் பீதி உண்டாகிறது. உடம்பு நடுங்குகிறது. சவுக்குத் தோப்பின் சத்தத்தைக் கேட்டாலும் அந்த ஞாபகம் வந்து விடுகிறது.''

சற்றுநேரம் பொறுத்துச் சூரியா "அத்தை! இதையெல்லாம் நீங்கள் சீதாவிடம் எப்போதாவது சொன்னீர்களா, என்ன?" என்று கேட்டான்.

"ஆமாம் சொன்னேன்! அவளை ஜாக்கிரதையாக இருக்கும்படியும் சொல்லியிருக்கிறேன்."

"இதை நீங்கள் சீதாவிடம் சொல்லியிருக்கக் கூடாது!" என்றான் சூரியா.

## முப்பத்து நாலாம் அத்தியாயம்

# கல்யாணமும் கண்ணீரும்

ராஜம் பேட்டை அக்கிரகாரம் திமிலோகப்பட்டது. கிட்டா வய்யர் வீட்டுக் கலியாணம் என்றால் சாதாரண விஷயமா? விவாக தினத்துக்கு ஒரு வாரத்துக்கு முன்னாலேயே மேளம் கொட்டியாகி விட்டது. பிறகு ஊரில் எந்த வீட்டிலும் அடுப்பு மூட்டப்பட வில்லை. எல்லாருக்கும் சாப்பாடு கிட்டா வய்யர் வீட்டிலேதான்!

வீதி முழுவதும் அடைத்துப் போட்டிருந்த பந்தலில் ஊர்க் குழந்தைகள் சதாகாலமும் கொம்மாளம் அடித்துக் கொண்டிருந்தார்கள்.

மாட்டுச் சதங்கைகளின் சத்தம் கேட்ட வண்ணமாக இருந்தது. வண்டிகளுக்கு ஓய்ச்சல் ஒழிவென்பதே கிடையாது.

கலியாணத்துக்கு முதல் நாள் இரண்டு கலியாணத்துச் சம்பந்திகளும் வந்து விட்டார்கள். பிறகு ஊருக்கு உற்சவத் தோற்றம் உண்டாகி விட்டது. தேர் திருவிழா மாதிரி ஜே ஜே என்று ஏகக் கூட்டம். ஜான்வாச ஊர்வலம் மேளதாளங்களுடனும் மத்தாப்பு வாண வேடிக்கைகளுடனும் அமோகமாக நடந்தது.

இவ்வளவு குதூகலத்துக்கும் உற்சாகத்துக்கு மிடையில் ஒரே ஒரு விஷயம் மட்டும் எல்லாருக்கும் கொஞ்சம் மனச் சஞ்சலத்தை உண்டாக்கி வந்தது. அது சீதாவின் தகப்பனார் துரைசாமி ஐயர் இன்னும் வந்து சேரவில்லையே என்பதுதான்.

ஆனால் இது காரணமாகச் சீதாவின் கல்யாணத்தை நிறுத்தி வைக்கும் பேச்சு ஏற்படவில்லை. ராஜம்மாளின் மனம் எத்தகைய வேதனை அடைந்திருந்த தென்பதை நாம் ஊகித்துக் கொள்ளலாம். ஆயினும் அவள் அதை வெளியில் சிறிதும் காட்டிக்கொள்ளவில்லை. தன்னுடைய கணவர் வந்து சேராவிட்டாலும் கலியாணத்தை நடத்திவிட வேண்டியதுதான் என்று சொல்லிவிட்டாள். இந்தக் கலியாணத்தை மனப் பூர்வமாக ஆமோதித்துத் துரைசாமி ஐயர் எழுதியிருந்த கடிதம் அவளுக்கு இந்த விஷயத்தில் மிக்க ஒத்தாசையாயிருந்தது. அந்தக் கடிதத்தைப் படித்துப் பார்த்த பிறகு

சம்பந்திகளுக்குச் சிறிது ஏற்பட்டிருந்த தயக்கமும் நீங்கிவிட்டது. பிறகு எல்லாருமே ரயில்வே உத்தியோகத்தைப் பரிகாசமாகப் பேசிச் சிரிக்க ஆரம்பித்து விட்டார்கள்.

ஸ்டேஷன் மாஸ்டர் ஒருவர் "எனக்குச் சீமந்தக் கலியாணம் வருகிறது. மூன்று நாள் லீவு வேண்டும்!" என்று கேட்டதற்கு வெள்ளைக்கார மேல் உத்தியோகஸ்தர் "அதெல்லாம் முடியாது; சீமந்தக் கலியாணத்தைப் பார்த்துக்க ஆள் போட்டு நடத்திக் கொள்!" என்று பதில் சொன்னார் அல்லவா? இந்தக் கதையைப் பல விதமாக மாற்றி ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டார்கள்.

இரவு பத்து மணி வரையில், அதாவது கடைசி ரயிலுக்குக் கூட, துரைசாமி வரவில்லையென்று ஏற்பட்ட பிறகு கிட்டா வய்யர் தம் சகோதரியுடன் ஆலோசனை செய்தார். ராஜம்மாளின் தமக்கை அபயாம்பாளும் அவளுடைய கணவரும் சீதாவைக் கன்னிகாதானம் செய்து கொடுக்க வேண்டும் என்று ஏற்பாடாயிற்று.

"சீதா கொடுத்து வைத்த புண்ணியசாலி; அதனாலேதான் வைதிக ஆச்சார அனுஷ்டானமுள்ள தம்பதிகள் அவளைக் கன்னிகாதானம் செய்து கொடுக்க நேர்ந்திருக்கிறது" என்று ராஜம்மாள் தன் மனதைத் திருப்தி செய்து கொண்டாள்.

அபயாம்பாளுடைய பெருமைக்கோ அளவேயில்லை "இப்படி அந்தப் பிராமணன் பண்ணி விட்டாரே?" என்று புகார் சொல்லிக் கொண்டே அவசர அவசரமாக ஓடி ஓடிக் காரியங்களைச் செய்தாள். "நாளைக்குப் பொழுது விடிந்தால் நான் பட்டுப் பாயில் உட்கார்ந்தே யிருக்க வேண்டும். ஒரு காரியமும் செய்ய முடியாது இன்றைக்குச் செய்தால்தான் செய்தது!" என்று பறந்தாள்.

கிட்டா வய்யர் தாம் செய்ய வேண்டிய கலியாண காரியங்களில் எல்லாம் லலிதாவையும் சீதாவையும் சரிசமமாகப் பாவித்தே சகல ஏற்பாடுகளும் செய்தார். பெண்ணுக்கு முகூர்த்தப் புடவையாகட்டும், மாப்பிள்ளைக்கு முகூர்த்த வேஷ்டியாகட்டும், ஒன்றுக்கொன்று ஏற்றத் தாழ்வு இல்லாமல் சமமாக வாங்கியிருந்தார். ஆனால் வீட்டு ஸ்திரீகளின் ஆதிக்கத்துக்கு உட்பட்ட சீர்வரிசைகளில் ஏற்றத் தாழ்வு இருக்கத்தான் செய்தது. சரஸ்வதி அம்மாள் தன் மகள் லலிதாவுக்கு ஒரு விதமாகவும் சீதாவுக்கு ஒருவிதமாகவும்தான் செய்தாள். சரஸ்வதி அம்மாளின் தாயார் இந்த வித்தியாசம் காட்டுவதில் மும்முரமாக இருந்தாள். ஆனால் ராஜம்மாளின் தமக்கை அபயாம்பாளோ அந்தமாதிரி ஏற்றத் தாழ்வுகளை நீக்குவதில் அக்கறை காட்டினாள். அடிக்கடி ராஜம்மாளிடம் வந்து, 'இதென்னடி அநியாயம்? இந்த மாதிரி ஒரு கண்ணுக்கு வெண்ணெயும் இன்னொரு கண்ணுக்குச் சுண்ணாம்பும் தடவுவது உண்டா? இரண்டு கண்ணையும் சமமாகப் பாவிக்க வேண்டாமா! இப்படிப் பாரபட்சம் செய்கிறாளே மன்னி? மன்னி செய்கிறது ஒரு பங்கு என்றால், அவள் அம்மா செய்கிறது மூன்று பங்காயிருக்கிறது. நானும் நீயும் இந்த வீட்டில் பிறந்தவர்கள் தானே? லலிதாவுக்கு இருக்கிற பாத்தியதை சீதாவுக்கு இல்லாமல் போய் விட்டதா?" என்று புலம்பினாள். அவளைச் சமாதானப் படுத்துவது ராஜம்மாளுக்குப் பெரும் வேலையாயிருந்தது. "நீ வாயை மூடிக்கொண்டு இரு, அக்கா! அந்த மனுஷர் இப்படி வருகிறதாகச் சொல்லி வராமல் மோசம் பண்ணி விட்டதற்கு ஏதோ இந்த மட்டில் நடக்கிறதே என்று நான் சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கிறேன். இந்தக் காலத்தில் யாருக்கு யார் இவ்வளவு தூரம் செய்வார்கள்? அண்ணாவின் நல்ல குணத்தினால் இது வரவது நடக்கிறது! இல்லாவிட்டால் என் கதி என்ன? பகவானுடைய அருளால் எனக்கு வாய்த்திருக்கிற மாப்பிள்ளையும் சம்பந்திகளும் "அது இல்லை; இது இல்லை" என்று குற்றம் சொல்லாதவர்கள். அப்படியிருக்க நீ எதற்காக வீணில் அலட்டிக் கொள்கிறாய்? நடந்த வரையில் சந்தோஷப் பட வேண்டாமா?" என்று ராஜம்மாள் அக்காவுக்கு ஆறுதல் கூறினாள்.

சீதாவுக்கு மனதிற்குள் எவ்வளவோ குறை இருக்கத்தான் செய்தது. அப்பா வராமல் இருந்து விட்டாரே என்று ஆத்திரம் பொங்கிக் கொண்டு வந்தது. லலிதாவுக்குச் செய்கிற மாதிரி தனக்




குச் செய்வாரில்லையே யென்று துக்கம் பீறிக்கொண்டு வந்தது. அந்த மாப்பிள்ளை சம்பந்திகளுக்கு நடக்கிற உபசாரங்கள் தன்னை மணக்க வந்த மணவாளனுக்கும் அவனைச் சேர்ந்தவர்களுக்கும் நடக்கவில்லையே என்று கோபம் பொத்துக் கொண்டு வந்தது. அதையெல்லாம் சீதா மனதிற்குள் அடக்கிக் கொண்டு, "நடக்கட்டும்; நடக்கட்டும். லலிதாவுக்கு எவ்வளவு வேணுமானாலும் நடக்கட்டும். ஆனால் நான் அடைந்த பாக்கியம் அவளுக்கு ஏது? என் கணவருக்கு அவள் கணவன் இணையாவானா?" என்று எண்ணி முகமலர்ச்சியுடன் இருந்தாள்.

இவர்கள் எல்லாரைக் காட்டிலும் அதிகமான மனவேதனைக்கு உள்ளாகியிருந்தான் சூரியா. இதற்குக் காரணம் கலியாணத்திற்கு முதல் நாள் ராஜம்மாள் பெயருக்கு வந்த ஒரு தந்திதான். வழக்கம்போல் தபால் வாங்குவதற்குத் தபால் ஆபீஸுக்குப் போயிருந்தபோது தபால் ரன்னர் தனியாகக் கொண்டு வந்திருந்த தந்தியையும் அவன் வாங்கிக் கொண்டான். அதைப் பிரித்துப் படித்ததும் அவன் திடுக்கிட்டுச் சொல்ல முடியாத மனக் குழப்பத்துக்கு ஆளானான். 'கலியாணத்தை நிறுத்திவிடவும். காரணம் நேரில் வந்து தெரிவிக்கிறேன் - துரைராம்' என்று அந்தத் தந்தியில் எழுதியிருந்தது.

அது விஷயமாக என்ன செய்வது என்று சூரியாவுக்கு இலேசில் தீர்மானம் செய்ய முடியவில்லை. சீதாவின் கல்யாண விஷயமாக மொட்டைக்



கடிதங்களை எழுதிய விஷமிகள் இந்தத் தந்தியையும் கொடுத்திருக்கலாம். ஏன் கொடுத்திருக்கக் கூடாது? அநேகமாக உண்மை அப்படித்தான் இருக்கும். ஆனால் தந்தியை மற்றவர்களிடம் காட்டினாலும் அதைப்பற்றிச் சொன்னாலும் பெருங் குழப்பம் உண்டாகி விடும். அது பொய்த் தந்தி என்று அவர்கள் நம்புவது கடினம். எல்லா ஏற்பாடுகளும் நடந்து சம்பந்திகளும் வந்து இறங்கிய பிறகு கல்யாணத்தை நிறுத்துவது என்பது எவ்வளவு அசம்பாவிதம்? சீதாவும் அவள் தாயாரும் எவ்வளவு துக்கம் அடைவார்கள்? எல்லாருக்குமே எவ்வளவு அசந்துஷ்டி உண்டாகும்? சம்பந்திகள் தான் என்ன நினைப்பார்கள்? ஊரார் என்ன சொல்வார்கள்? சுற்றுப்புறத்து கிராமவாசிகள் எல்லாம் கேலி பண்ணிச் சிரிப்பார்களே? ஒரு பொய்த் தந்தி இவ்வளவு விபரீதங்களையும் விளைவிப்பதற்கு இடங் கொடுத்து விடுவதா?

எது எப்படியிருந்த போதிலும் இந்தத் தந்தியை இப்போது எல்லாரிடமும் காட்டிக் குழப்பம் விளைவிக்கக் கூடாது என்று சூரியா முடிவு செய்தான். இராத்திரிக்குள் எப்படியும் துரைசாமி ஐயர் வந்து விடக் கூடும். அவர் வந்த பிறகு அப்படி அவசியமாயிருந்தால் கல்யாணத்தை நிறுத்திக் கொள்ளட்டும். அப்போது கூட அவரைக் காரணம் கேட்டுவாதாடிப் பார்ப்பது தன்னுடைய கடமை. எது எப்படியானாலும் தந்தியைப் பற்றி இப்போது பிரஸ்தாபிக்கக் கூடாது. இராத்திரியும் துரைசாமி ஐயர் வராவிட்டால் பார்த்துக் கொள்ளலாம்.

இவ்வாறு முடிவு செய்திருந்த சூரியா இராத்திரி வந்து சேரும் வண்டியிலும் துரைசாமி ஐயர் வாராமற் போகவே முன்னைக்காட்டிலும் அதிக குழப்பத்தில் ஆழ்ந்தான். ஜான்வாச ஊர்வலம் எல்லாம் நடந்த பிறகு தந்தியைப் பற்றிப் பிரஸ்தாபிப்பது மேலும் கஷ்டமாய் விட்டது. யாரோ ஒரு முட்டாள், மடையன் பொறாமைப் பிசாசு, கொடுத்திருக்கக் கூடிய பொய்த் தந்தி காரணமாக இவ்வளவு ஏற்பாடுகளும் நின்று போவதால் சீதாவுக்கும் ராஜம்மாளுக்கும் ஏற்படக்கூடிய அதிர்ச்சியை நினைத்த போது சூரியாவுக்குத் தந்தியைக் கொடுக்கும் தைரியம் தனக்கு வரவே வராது என்று தோன்றி விட்டது. "கடவுள் விட்ட வழி விட்டும்; நடந்தது நடக்கட்டும்; தந்தியை

அமுக்கி விடுவதுதான் சரி" என்று முடிவு செய்தான். ஆனால் அமுக்கிய தந்தி அவனுடைய மூளைக்குள் இருந்து தொல்லைப் படுத்திக் கொண்டேயிருந்தது. இரவில் ஒரு கணமும் தூக்கமில்லாமல் செய்து கொண்டிருந்தது.

மறுநாள் பொழுது விடிவதற்குள் கல்யாண முகூர்த்தத்திற்குரிய ஏற்பாடுகள் தொடங்கி விட்டன. பத்து மணிக்குள்ளே முகூர்த்தமாகையால் ஒரே பரபரப்பாகக் காரியங்கள் நடைபெற்றன. "முகூர்த்தம் வந்து விட்டது! சீக்கிரம்! சீக்கிரம்!" என்று தலைக்குத்தலை கூச்சல் போட்டார்கள். மாப்பிள்ளைகள் இரண்டு பேரும் காசியாத்திரை புறப்பட்டுப் பத்து அடி தூரம் போகக்கூட இடங் கொடுக்கவில்லை. "எல்லாம் போதும்; காசிக்கே போய் விடாதீர்கள்!" என்று சத்தம் போட்டார்கள். மாமா தோள் தூக்குவது, மாலை மாற்றுவது எல்லாம் சட்டபட் என்று நடந்தன. கன்னிகாதான — திருமாங்கல்யதாரணத்துக்கு உரிய நல்ல முகூர்த்தம் வந்தது. இரட்டை நாதஸ்வரங்கள் காதைத் தொளைக்கும்படி இரைச்சலிட, தவுல் வாத்தியங்களை அடித்த அடியில் வீடெல்லாம் கிடு கிடுக்க, வேத மந்திர கோஷங்கள் வானை அளாவ, வீட்டு ஸ்திரீகள் நார்ரெட்டு அபஸ்வரங்களுடன் 'கௌரி கல்யாணம்' பாட, சீதாவின் கழுத்தில் ஸ்ரீ சௌந்தரராகவன் திருமாங்கல்யத்தைக் கட்டினான். அதே சமயத்தில் பட்டாபிராமன் லலிதாவின் கழுத்தில் தாலியைக் கட்டி முடிச்சுப் போட்டான்.

திருமாங்கல்யதாரணம் ஆன பிறகு பரபரப்பும் சத்தமும் ஓரளவு அடங்கின. வீட்டுக்குள்ளே அத்தனை நேரம் நெருக்கி அடித்துக் கொண்டு வியர்க்க விறுவிறுக்க உட்கார்ந்திருந்தவர்கள் இனி தங்களுடைய பொறுப்பு தீர்ந்தது என்பதுபோலக் கொஞ்சம் காற்று வாங்க வாசற்பக்கம் சென்றார்கள்.

சூரியாவும் வெளியே வந்தான். காலையிலிருந்து உள்ளுக்கும் வாசலுக்கும் ஆயிரம் தடவை நடந்திருந்த சூரியாவின் மனம் இப்போது சிறிது அமைதி அடைந்தது. "கல்யாணம் நடந்து விட்டது. இனி மாற்றுவதற்கு இல்லை" என்ற எண்ணம் அவனுக்கு அந்த நிம்மதியை யளித்தது.

சற்று நேரத்துக்கெல்லாம் வண்டி மாட்டின் சதங்கைச் சத்தம் 'ஜில் ஜில்' என்று கேட்டது. தெரு மூலையில் கிட்டா வய்யரின் சபட்டி வண்டி வந்தது. முதல் நாள் மாலை ரயில்வே ஸ்டேஷனுக்குப் போய்க் காத்துக் கொண்டிருந்த வண்டிதான். அது வெறும் வண்டியாக யில்லை. உள்ளே உட்கார்ந்திருந்தவர் பம்பாய் அத்திம்பேராகத்தான் இருக்க வேண்டும்.

சூரியா பரபரப்புடன் வண்டியை எதிர் கொண்டழைப்பதற்கு முன்னால் சென்றான். கல்யாணப் பந்தலின் முகப்பில் வண்டி நின்றது. வண்டியில் இருந்தவர் இறங்குவதற்குள்ளே சூரியா, "அத்திம்பேரே! என்ன இப்படிச் செய்துவிட்டீர்களே! உங்களுக்காகக் காத்திருந்து காத்திருந்து எல்லாருடைய கண்ணும் பூத்துப் போய்விட்டது!" என்றான்.

வண்டிக்குள் இருந்தது துரைசாமி ஐயர்தான். அவர் சூரியாவை ஏற இறங்கப் பார்த்தார்.

"என் பெயர் சூரியா. சீதாவின் அம்மாஞ்சி நான்!" என்று சூரியா தன்னைத்தானே அறிமுகப் படுத்திக் கொண்டான்.

"ஓஹோ! கிட்டா வய்யரின் இரண்டாவது பையனா?"

"ஆமாம், அத்திம்பேரே! ஏன் இத்தனை தாமதமாய் வந்தீர்கள்? பதினைந்து நிமிஷந்தான் ஆயிற்று திருமாங்கல்ய தாரணம் நடந்து! பெரிய அத்தையும் அவளுடைய அகத்துக்காரரும் கன்னிகாதானம் செய்து கொடுத்தார்கள்."

"என்ன? என்ன? திருமாங்கல்ய தாரணமா! யாருக்கு? எப்போது?"

"ஏன்! லலிதா, சீதா இரண்டு பேருக்குந்தான்."

"சீதாவுக்கா? சீதாவுக்குக்கூடவா? மாப்பிள்ளை யார்?"

"சௌந்தரராகவன்தான். என்ன அத்திம்பேரே? உங்களுக்குக் கலியாணக் கடுதாசி வரவில்லையா? ஆனால் உங்களுக்குத்தான் முன்னமே தெரியுமே? டில்லியிலே யிருந்து எழுதி யிருந்தீர்களே!"

"நான் ஒரு தந்தி கொடுத்திருந்தேனே? அது வரவில்லையா?" என்று

துரைசாமி ஐயர் கேட்டபோது அவருடைய பேச்சுக் குளறியது.

"தந்தியா? ஒன்றும் வரவில்லையே? என்ன தந்தி?" என்று சூரியா துணிச்சலாகக் கேட்டான்.

"சீதாவின் கல்யாணத்தை நிறுத்தி விடும்படி தந்தி கொடுத்திருந்தேன். அது வரவில்லையா?"

சூரியா தன் மனக் குழப்பத்தைச் சமாளித்துக் கொண்டே, "அத்திம்பேரே? இப்போது நினைவு வருகிறது. கொஞ்ச நேரத்துக்கு முன்னால்தான் ஒரு தந்தி வந்தது. கல்யாண தடபுடலில் அதை நான் பிரித்துக்கூடப் பார்க்கவில்லை. அதை அத்தையிடம் கொடுக்கவும் சந்தர்ப்பப் படவில்லை. இது தானா நீங்கள் கொடுத்த தந்தி?" என்று சட்டைப் பையில் துழாவித் தந்தியை எடுத்துக் கொடுத்தான்.

துரைசாமி ஐயர் தந்தியைப் பிரித்துப் பார்த்தார். "ஆமாம், இதுதான்! ஆகா! இது ஏன் நேற்றைக்கே வரவில்லை? பட்டிக்காடு ஆனபடியால் இப்படித் தாமதித்து வந்திருக்கும். எல்லாம் கடவுளுடைய செயல். நாம் என்ன செய்யலாம்? சூரியா! இந்தத் தந்தியைப் பற்றி ஒருவரிடமும் சொல்லாதே!"

"ஆம்; அத்திம்பேரே! இனிச் சொல்லி என்ன பிரயோஜனம்? நடந்தது நடந்துவிட்டது!" என்றான்.

"ஆமாம்; நடந்து நடந்துவிட்டது. கடவுளுடைய சித்தம் அப்படி" என்று சொல்லிவிட்டுத் தந்தியைச் சுக்கு நூறாகக் கிழித்துப் போட்டார்.

இது வரை சீதா அடிக்கடி தன் கடைக் கண்ணால் மாப்பிள்ளை சௌந்தர ராகவனைப் பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்தாள். திடீரென்று வாசலில் வாசற்படி வழியாகத் தன் தந்தை வருவதைப் பார்த்தாள். அவ்வளவு நேரமும் அவள் மனதிற்குள் அடக்கி வைத்திருந்த அழுகை பீறிக் கொண்டு வந்து விட்டது. விசித்து விசித்து விம்மி விம்மி அழத் தொடங்கினாள். கண்களிலிருந்து கண்ணீர் அருவியாகப் பெருகியது.

ராஜம்மாள் உணர்ச்சி மிகுதியினால் செயலற்றுத் தூணோடு தூணாக நின்றாள். ஆகையால் அவளால் பெண்ணைத் தேற்றுவதற்கு முடியவில்லை. அந்தக் கடமையைச் சீதாவைச் சற்று முன்னே கன்னிகாதானம் செய்து கொடுத்த அபயாம்பாள் செய்தாள். "அசடே! எதற்காக அழுகிறாய்? அப்பாதான் வந்து விட்டாரே! இந்த மட்டும் வந்தாரே என்று சந்தோஷப்படு!" என்றாள். சீதாவின் மாமியாரும் அருகில் வந்து தேறுதல் கூறினாள். பக்கத்தில் உட்கார்ந்து சீதாவின் புடவைத் தலைப்பையும் மாப்பிள்ளையின் அங்க வஸ்திரத்தின் முனையையும் முடிச்சுப் போட முயன்று கொண்டிருந்த சுண்டுப் பயல்கூடத் தேறுதல் கூறினான். "அழாதே! அத்தங்கா! அழுதால் கண் மையெல்லாம் கன்னத்தில் வழிந்துவிடும்!" என்றான்.

துரைசாமி ஐயர் வந்து சீதாவின் அருகில் உட்கார்ந்து, "அழாதே, அம்மா! ரயில் இப்படி மோசம் செய்துவிட்டது! இல்லாவிடில் நான் வராமல் இருப்பேனா?" என்று சொல்லிச் சீதாவின் முதுகை மிருதுவாகத் தட்டிக் கொடுத்தார்.

அப்படியும் அழுகை நிற்காததைக் கண்ட சௌந்தரராகவன் இலேசாகத் தன் மனைவியின் கரத்தைத் தொட்டு "சீதா!" என்றான்.

சீதாவின் கண்ணீர்ப் பெருக்கு உடனே நின்றது. அவள் கண்ணீர் ததும்பிக் கொண்டிருந்த தன் வட்டமான பெரிய கண்களால் சௌந்தர ராகவனை ஒரு தடவை பார்த்தாள். அந்தப் பார்வையில் எத்தனையோ விஷயங்கள் பொதிந்து கிடந்தன. வாயினால் விவரிக்க முடியாத இதயத்தின் மர்மச் செய்திகள் எவ்வளவோ அந்தப் பார்வையில் செறிந்திருந்தன.

காதல் என்னும் அகராதியின் உதவி கொண்டு சௌந்தர ராகவன் அந்தப் பார்வையின் பொருள்களை ஓரளவு அறிந்து கொண்டான்.

---

## முதல் பாகம் முற்றிற்று.

---



குழந்தை ஜவாஹர்　　　　உபநயன பிட்சை

# வாழிய செந்தமிழ்!

ஜூலை மீ 17உ சனிக்கிழமை மாலை "கல்கி" காரியாலயத்தில் ஒரு முக்கியமான இனிய நிகழ்ச்சி நடந்தேறியது.

சென்னைக் காங்கிரஸ் மந்திரி சபையார் தமிழ் நாட்டுக்குப் பாரதியாரின் "வாழிய செந்தமிழ்"ப் பாடலின் முதல் இரண்டு வரிகளைத் தேசிய கீதமாக ஏற்படுத்தியிருக்கிறார்கள் அல்லவா?

அருமையான பாடல் வரிகள் அவை. அர்த்தபுஷ்டி வாய்ந்தவை.

> "வாழிய செந்தமிழ் வாழ்க நற்றமிழர்
> வாழிய பாரதமணித் திருநாடு
> வந்தேமாதரம் வந்தேமாதரம்!"

என்னும் வரிகளிலே பாரதியாரின் அளவில்லாத் தமிழ்ப் பற்று, தமிழரிடத்து அன்பு, பாரத தேசத்திடம் அவருடைய ஒப்பற்ற பக்தி ஆகியவை எல்லாம் வெளியாகின்றன. தமிழ் சிறக்க வேண்டும், தமிழர் மேன்மையுற வேண்டும், பாரத நாடு ஒன்றுபட்டு ஒரே தேசமாக மகோன்னதமடைய வேண்டும், பிறந்த நாட்டிடம் இந்திய மக்கள் தாயைப்போல் அன்பு செலுத்த வேண்டும் என்னும் பாரதியாரின் இலட்சியங்கள் வெளியாகின்றன.

தமிழின் சிறப்பு, தமிழரின் மேன்மை ஆகியவற்றுக்கும், நம் எல்லாருக்கும் பொதுத் தாய்நாடான பாரத நாட்டிடம் பக்தி செலுத்துவதற்கும் முரண்பாடு இல்லையென்பதும் நன்கு வெளியாகிறது. இவ்வளவு அழகான பாரதி பாடல் வரிகளைத் தமிழ் நாட்டின் தேசியகீதமாக்கியது மிகப் பொருத்தமானது.

மேற்படி இரண்டு வரிப் பாடலைத் தேசியகீதம் ஆக்குவதென்றால் அதை நாட்டிலும் நகரத்திலும் பொதுக் கூட்டங்களிலும் பள்ளிக் கூடங்களிலும் சுதந்திர விழாக்களிலும் வைபவங்களிலும் பாட வேண்டியது அவசியமல்லவா? அதுவும் ஒரே மெட்டில் ஒரு மாதிரி பலர் சேர்ந்து பாடுவது அவசியமல்லவா?

மந்திரிமார்கள் சிலரின் விருப்பத்தின்படி ஸ்ரீமதி எம். எஸ் சுப்புலக்ஷ்மி அந்தத் திருப்பணியை ஏற்றுக் கொண்டார். வேறு சில சங்கீத வித்வான்களின் உதவியையும் வைத்துக் கொண்டு "வாழிய செந்தமிழ்" பாடலுக்கு ஒரு மெட்டு அமைத்தார். குழந்தைகள் முதல் எல்லாரும் சுலபமாகப் பாடக் கூடியதாகவும் பலர் சேர்ந்து பாடக்கூடியதாகவும் அமைத்தார். தமிழ் நாட்டுக்குரிய பழமையான ராகங்களில் ஒன்றான மத்யமாவதி ராகத்தில் ஆதிதாளத்தில் சமஎடுப்பில் மெட்டு அமைந்திருக்கிறது.

சாதாரணமாகத் தமிழ் நாட்டுச் சங்கீத நிகழ்ச்சிகளில் கடைசியாக மத்தியமாவதி பாடி முடிக்கும் சம்பிரதாயம் உண்டு.

ஆகையால் எல்லா வைபவங்களிலும் கடைசியில் பாடி முடிக்க வேண்டிய மங்கள வாழ்த்துப் பாடல் மத்தியமாவதியில் அமைவது மிகப் பொருத்தமல்லவா?

அந்தப் பாடலையும் மெட்டையும் ஸ்ரீமதி எம். எஸ். ஒரு சிறப்பான சபையின் முன்னால் அரங்கேற்றினார்.

மேற்படி வைபவத்திற்கு மந்திரிகள் டாக்டர் டி எஸ் எஸ் ராஜன், ஸ்ரீ எம். பக்தவத்ஸலம், ஸ்ரீ டி. எஸ். அவினாசிலிங்கம் ஆகியவர்களும் சட்டசபைத் தலைவர் ஸ்ரீ ஜே சிவசண்முகம் பிள்ளையும், ஹைக்கோர்ட் பிரதம நீதிபதி ராஜமன்னார் அவர்களும், ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார், திருப்புகழ் மணி டி. எம். கிருஷ்ணசாமி ஐயர், ஸ்ரீ எஸ். வேங்கடேசுவரன் முதலிய ரஸிகர்களும், தமிழ் நாட்டுக் காங்கிரஸ் கமிட்டி தலைவர் ஸ்ரீ காமராஜ நாடாரும், ஸ்ரீ கே. ஸ்ரீனிவாசன் (ஹிந்து), ஸ்ரீ டி. எஸ். சொக்கலிங்கம் (தினசரி), ஸ்ரீ ஏ. என். சிவராமன் (தினமணி), ஸ்ரீ எஸ் வி. சுவாமி (பாரததேவி) முதலிய பத்திரிகாசிரியர்களும், யுனிவர்ஸிடி சங்கீதப் பேராசிரியர் ஸ்ரீ பி சாம்பமூர்த்தியும், காயன கந்தர்வ செம்பை வைத்தியநாத பாகவதர், கானகலாதர மணி ஐயர், இசையரசு எம். எம். தண்டபாணி தேசிகர், வேலூர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை முதலிய சங்கீத வித்வான்களும் விஜயம் செய்து சபையைச் சிறப்பித்தார்கள்.

ஸ்ரீமதி எம் எஸ் சுப்புலக்ஷ்மி கோஷ்டிகானமாகவும், தாமே தனியாகவும், ஆர்ச்செஸ்ட்ராவுடனும் "வாழிய செந்தமிழ்" பாடலைப் பாடிக் காட்டினார்.

தமிழ்த் தேசிய கீதத்துக்கு அமைந்த மத்தியமாவதி ராக மெட்டை அனைவரும் ஆமோதித்துத் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்தார்கள்.

சபை கலையும் தருணத்தில் அமோகமாக மழை பெய்து "வாழிய செந்தமிழ்"க் கீதத்துக்கு வரவேற்பு அளித்தது.



# மனிதகுல மாணிக்கம்

எம். எல். எஸ்.

"'ராஷ்ட்ரபதி பண்டித ஜவாஹர்லால் நேருவுக்கு ஜே!'

இந்த கோஷத்தைக் கேட்டதும், கூட்டத்துக்கு மத்தியிலே வெகு வேகமாகப் போய்க் கொண்டிருந்த பண்டித நேரு தலையைத் தூக்கி முன்னாலே பார்த்து மக்களைக் கைகூப்பி வணங்கினார். சோபை இழந்து வெளிறிப் போயிருந்த அவருடைய முகத்திலே ஒரு புன்னகை ததும்பிற்று. அதைப் பார்த்த அப்பெருங் கூட்டமும் புன்னகை பூத்து மகிழ்ந்தது.

மறு நிமிஷம் ஜவாஹருடைய புன்னகை மறைந்தது. அவருடைய முகம் மீண்டும் கடுகடுப்பாக மாறியது. அந்தப் புன்னகையிலே கொஞ்சமாவது உண்மையோ உள்ளன்போ காணப்படவில்லை.

இதெல்லாம் இயற்கையானதுதானா, அல்லது ஜனங்களை ஏமாற்றுவதற்காக ஆலோசித்துச் செய்யப்பட்ட சூழ்ச்சியா?

வர்ணம் பூசாமலே நாடக மேடை நடிகனைப்போல நடிப்பதற்கு ஜவாஹர்லால் நன்றாகக் கற்றுக் கொண்டு விட்டார். இந்தகைய நடவடிக்கைகளால் அவருக்கு என்ன நேரப்போகிறதோ, தேசத்துக்குத்தான் என்ன நேரப் போகிறதோ?

இரண்டு வருஷ காலமாக அவர் காங்கிரஸ் மகா சபையின் ராஷ்ட்ரபதியாக இருந்து வருகிறார். கொஞ்சங் கொஞ்சமாகவும் இடைவிடாமலும் அவர் தம்முடைய செல்வாக்கையும் மதிப்பையும் பெருக்கிக் கொண்டே போகிறார்.

இந்தப் பாரத தேசத்தின் குறுக்கும் நெடுக்குமாக அவர் பிரயாணம் செய்கிறார். எங்கும் பிரமாதமான வரவேற்புக் கிடைக்கிறது. வட கோடியிலிருந்து தென் கோடி வரை, ஜூலியஸ் ஸீஸரைப்போல மகா வீரப் பிரதாபத்துடன் திக்கு விஜயம் நடக்கிறது. இதெல்லாம் வெறும் பொழுது போக்கா, களியாட்டமா, அல்லது ஒரு பெரும் சதியா?

ஜவாஹர்லால் தம்மை ஒரு ஜனநாயக வாதி என்றும் சோஷலிஸ்ட் என்றும் சொல்லிக் கொள்ளுகிறார். ஆனால் இறுதியில் மனம் ஆசைக்கு அடிமையாகி விடும் என்பது எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். தம்முடைய போக்கு கொஞ்சம் வேறு பக்கம் திரும்பிவிட்டால் ஜவாஹர்லால் நேரு சர்வாதிகாரியாக மாறிவிடக் கூடும். ஆகையால் அவர் சர்வ ஜாக்கிரதையாயிருக்க வேண்டும்.........."

இவ்விதமாகப் பல வருஷங்களுக்கு முன்பு கல்கத்தாவில் நடக்கும் 'மாடர்ன் ரிவ்யூ' பத்திரிகையில் ஒரு கட்டுரை வெளி வந்தது. அதை எழுதியவருடைய உண்மைப் பெயர் என்னவென்பது வெகு காலம் வரை யாருக்கும் தெரியவில்லை. கடைசியில், ஜவாஹர்லால் தான் அதை எழுதினார் என்பதை அறிந்ததும் அந்தப் பத்திரிகை ஆசிரியரே திகைத்துப் போனார்.

பண்டித நேரு அடிக்கடி தமக்குள் தாமே சோதனை செய்து பார்த்துக் கொள்ளும் வழக்கமுடைய நேர்மையாளர். ஒரு சமயம் தம்முடைய குறைகளைப் பற்றித் தாமே

சிந்தனை செய்தார். அந்தச் சிந்தனைகளையே ஒரு கட்டுரையாக எழுதி மேற் கண்டவாறு பத்திரிகைக்கு அனுப்பினார்.

ஹொரேஸ் அலெக்ஸாண்டர் என்ற பிரிட்டிஷ் பேரறிஞர் ஒருவர், "இன்று உலகத்திலே நேர்மையும் அந்தரங்க சுத்தியும் உள்ள ஒன்றிரண்டு ராஜ தந்திரிகளுக்குள்ளே பண்டித நேருவும் ஒருவர்" என்றார்.

அது எவ்வளவு உண்மை!

* * *

மொகலாய சாம்ராஜ்யம் க்ஷீண திசை யடைந்து வந்த காலம். வடக்கே வெகுதூரத்துக்கு அப்பால் ஹிமயமலைக்குப் பக்கத்தில் காஷ்மீர தேசத்தில் நேரு குடும்பம் வசித்து வந்தது. காஷ்மீரம் மிக்க அழகிய தேசம். செடிகளும் கொடிகளும் மலர்களும் பூத்துக் குலுங்கும் ஒரு வானுலக நந்தவனம் போன்றது. அதைப் போலவே அங்கு வாழும் மக்களும் மிக்க அழகானவர்கள். நேரு குடும்பம் வெகு காலம் வரை ஆனந்தமாக அங்கு வாழ்ந்து வந்தது. பிறகு ஏதோ ஒரு காரணத்தை முன்னிட்டு, அந்த தேசத்தை விட்டுப் புறப்பட்டு, தெற்கே வெகு தூரத்துக்கப்பால், மொகலாய சாம்ராஜ்யத்தின் தலைநகரமான டில்லிமா நகரத்துக்கு வந்து சேர்ந்தார்கள்.

அவர்களுடைய கல்வியறிவையும் இதர குணாதிசயங்களையும் கண்டு மகிழ்ந்த மொகலாய மன்னன் அவர்களுக்கு வேண்டிய செல்வத்தை எல்லாம் கொடுத்து அவர்களை டில்லியிலே வைத்துக் கொண்டான். ஆனால், அவர்கள் டில்லியில் வெகுகாலம் இருக்க முடியவில்லை. முதலாவது இந்திய சுதந்தர யுத்தமாகக் கருதப்படும் சிப்பாய்க் கலகம் அப்போதுதான் மூண்டது. பிரிட்டிஷ் பீரங்கிகளுக்கும் துப்பாக்கிகளுக்கும் பயந்து ஏராளமான மக்கள் டில்லியை விட்டு ஓடிப்போனார்கள்.

மேலே குறிப்பிடப்பட்ட காஷ்மீரக் குடும்பமும் டில்லியை விட்டுக் கிளம்பி, இப்போது அலஹாபாத் என்று வழங்கப்படும் புண்ணிய க்ஷேத்திரமாகிய பிரயாகையை அடைந்தது.

இந்தக் குடும்பத்திலேதான் பண்டித ஜவாஹர்லால் நேரு 1889-ம் வருஷம் பிறந்தார்.

ஜவாஹரின் தந்தையாகிய பண்டித மோதிலால் நேரு, அந்தக் காலத்திலே அலஹாபாத்தில், ஏன், இந்திய விலேயே மிகவும் புகழ்பெற்ற வக்கீல்களில் ஒருவராக விளங்கி வந்தார். அவர் மேல் நாட்டு நாகரிகத்தில் மூழ்கித் திளைத்திருந்தார். ஒவ்வொரு சின்ன விஷயத்திலுங்கூட அவர் மேல் நாட்டுப் பழக்க வழக்கங்களையும் சம்பிரதாயங்களையுமே பின்பற்றி வந்தார். அத்தகையவர் தம்முடைய குமாரன் ஜவாஹரை வளர்ப்பதற்கு ஒரு ஆங்கிலப் பெண்ணை நியமித்ததில் அதிசயம் ஏதுவும் இல்லை. ஜவாஹர்லால் சின்னஞ் சிறு குழந்தையாக இருக்கும் போதே ஆங்கிலத்தில் வெகு திருத்தமாகவும் நன்றாகவும் பேசுவாராம்.

செல்வக் குழந்தையாகிய ஜவாஹருடைய ஆண்டு விழா வருஷந்தோறும் வெகு சிறப்பாகக் கொண்டாடப்படும். அன்று ஜவாஹருக்கு உறவினர்களிடமிருந்தும் வேறு பல பிரமுகர்களிடமிருந்தும் ஏராளமான பரிசுகளும் தின்பண்டங்களும் கிடைக்கும். அன்று முழுவதும் ஜவாஹர்லாலுக்கு ஒரே ஆனந்தமாக இருக்கும். ஆனால், இரவு படுக்கப் போகும் போது அவருக்கு அளவு கடந்த வருத்தம் உண்டாகி விடும். அழுகைகூட வந்து விடும். "இந்தப் பாழாய்ப்போன பிறந்த நாள் வருஷத்துக்கு ஒரு முறைதானே வருகிறது? அடிக்கடி வந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்!" என்று வருந்துவார்.

ஜவாஹர்லாலுக்குப் பத்து வயதான போது, மோதிலால் நேரு தம் குடும்பத்



திருமணம் புரிந்த தம்பதிகள்

டன், புதிதாகக் கட்டப்பட்ட ஆனந்த பவனம் எனனும் பிரமாண்டமான மாளிகைக்குக் குடிவந்தார். அந்த மாளிகை அமைக்கப்பட்ட இடம் மிக்க புனிதமான இடமாம். ராமபிரான் பதினான்கு ஆண்டுகள் வனவாசத்தைக் கழித்த பிறகு பரதனை இந்த இடத்தில்தான் முதல் முதலாகச் சந்தித்தாராம். பிரயாகை க்ஷேத்திரத்திலே, இத்தகைய புனிதமான இடத்தில் அமைக்கப் பட்டதால்தானோ என்னவோ, பிற்காலத்தில் ஆனந்த பவனம் இந்திய தேசிய இயக்கத்துக்கு கதாநாயகமாக விளங்கி, சுதந்திர யாத்திரைத் திருக்கோயிலாகப் புகழ் பெற்றது.

அவ்வளவு பெரிய ஆனந்த பவன மாளிகையிலே ஜவாஹருக்கு ஒரு குறை. விளையாடுவதற்கு அவருடைய வயதை ஒத்த குழந்தைகள் யாரும் இல்லை. இது அவருக்குப் பிடிக்க வில்லை. ஒரு நாள் பகலெல்லாம் அமைதியாக இருந்த அந்த வீட்டில் திடீரென்று 'குவா' 'குவா' என்ற சத்தம் கேட்டது.

ஜவாஹர் தன் பெரியம்மாவை நோக்கி, "அது என்ன, அம்மா?" என்று கேட்டார்.

அன்னையும் பிதாவும் அருமை மகனும்



"அதுவா தம்பி, உனக்குத் தங்கை பிறந்திருக்கிறாள்!" என்றாள் அவள்.

"அப்படியா, இனிமேல் இந்தப் பெரிய மாளிகையில் நான் மட்டும் தனியாகக் கஷ்டப்பட வேண்டிய அவசியம் இல்லை" என்று ஜவாஹர் சந்தோஷப்பட்டார்.

அப்போது பிறந்த தங்கைதான், இப்போது ருஷ்யாவிலே ஸ்தானாதிபதியாக இருக்கும் ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி பண்டிட்.

இளமைப் பருவத்தில் ஜவாஹர் பள்ளிக்கூடத்துக்குப் போனதே இல்லை. அவர் ஏன் பள்ளிக்கூடம் போகவேண்டும்? மோதிலால் நேரு நினைத்தால், பள்ளிக்கூடம் அல்லவா அவருடைய செல்வக் குமாரனிடம் போக வேண்டும்? உண்மையாகவே வீட்டில் ஜவாஹருக்காக ஒரு பள்ளிக்கூடம் நடக்கத்தான் செய்தது. மோதிலால் நேரு சிறந்த ஆசிரியர்களை வரவழைத்து ஜவாஹருக்கு வீட்டில் கல்வி கற்பிக்க ஏற்பாடு செய்தார். ஜவாஹர் முதலில் ஹிந்தி, பாரசீகம், சமஸ்கிருதம் முதலிய மொழிகளைக் கற்றார். பிறகு தம்முடைய பதினொன்றாவது வயதில் பெர்டினண்ட் புரூக்ஸ் என்ற ஓர் ஆங்கில ஆசிரியரிடம் கல்வி கற்கத் தொடங்கினார்.

ஜவாஹருக்கு இப்போது வயது பதினைந்து ஆயிற்று. அவரை பிரிட்டனில் உள்ள ஒரு புகழ் பெற்ற பள்ளிக்கூடத்தில் சேர்க்க வேண்டுமென்று மோதிலால்நேரு விரும்பினார். அவ்விதமே 1905-ம் வருஷம் ஜவாஹரை அழைத்துக் கொண்டு போய், பெரும் பிரபுக்களும் யுவராஜாக்களும் கல்வி கற்கும் ஹாரோ பள்ளியில் ஜவாஹரைச் சேர்த்துவிட்டு இந்தியாவுக்குத் திரும்பினார்.

முதலில் ஜவாஹருக்கு லண்டன் வாழ்க்கை மிகவும் கஷ்டமாக இருந்தது. சொந்த தேசத்தையும் தந்தை தாயையும் சுற்றத்தார்களையும் விட்டுப் பிரிந்து, முன் பின் தெரியாத ஒரு தேசத்தில் வசிப்பதென்றால் பதினைந்து வயதுப் பையனுக்கு ஓரளவு சங்கடமாகத்தானே இருக்கும்! ஆனால், திட நெஞ்சம் படைத்த ஜவாஹர் கொஞ்ச காலத்துக்குள் அதைச் சமாளித்துக் கொண்டு, தம்முடைய பள்ளிக்கூட வாழ்க்கையில் ஒரு வகை இன்பத்தையும் குதூகலத்தையும் கண்டார்.

ஹாரோவில் இரண்டு வருஷம் கல்வி கற்ற பிறகு, காம்பிரிட்ஜ் கல்லூரிக்குச் சென்று அங்கு மூன்று வருஷம் படித்தார்.

அத்துடன் அவருடைய கல்லூரிப் படிப்பு முடிந்தது. பிறகு ஏதாவது ஒரு தொழிலுக்குப் படிக்க வேண்டுமென்று விரும்பினார். ஆனால், எந்தத் தொழிலுக்குப் படிப்பது? கடைசியில் சட்டம் படித்து, தம்முடைய தந்தையைப் போல ஒரு வக்கீலாகவே சரி என்று நினைத்து, லண்டன்மா நகரத்துக்குச் சென்றார்.

ஜவாஹர் இவ்விதம் மேல் நாட்டிலே கல்வி கற்றுக் கொண்டிருந்த போது, அந்தக் கல்வியில் மாத்திரமே மூழ்கியிருந்துவிடவில்லை. வெளியுலகத்துடன் அதிகமாகப் பழகினார். பல ஐரோப்பிய நாடுகளுக்குச் சென்று அங்குள்ள மக்கள், அவர்களுடைய வாழ்க்கை முதலியவற்றை நன்றாகத் தெரிந்து கொண்டார். பல புத்தகங்களைப் படித்துத் தம் அறிவைப் பெருக்கிக்கொண்டார். முக்கியமாக, அவர் பிரிட்டனில் இருந்த போது இந்திய அரசியல் நிலைமையை மிகவும் கவனமாக ஆராய்ந்து வந்தார். அப்போது இந்தியாவில் அரசியல் கொந்தளிப்பு அதிகமாக இருந்தது. பால கங்காதர திலகரைப் போன்ற பல தலைவர்களை இந்திய சர்க்கார் கைது செய்து சிறையில் வைத்தார்கள். நாளுக்கு நாள் அடக்குமுறைகளும் அவசரச் சட்டங்களும் அதிகமாகிக் கொண்டே வந்தன.

*　　　*　　　*

**1912**-ம் வருஷம் ஜூன் மாதம். ஒரு நாள் மோதிலால் நேருவின் வீட்டில் ஒரே கோலாகலமாக இருந்தது. வீட்டில் இருந்த எல்லோருடைய முகத்திலும் ஆனந்தம் பொங்கித் ததும்பிற்று. ஸ்ரீமதி ஸ்வரூப ராணி மணியைப் பார்ப்பதும் வாசலுக்குப் போவதும் மறுபடி உள்ளே வருவதுமாக இருந்தார். அடுப்பங்கரையிலே பரபரப்பாகப் பல வகைப் பட்சணங்கள் தயாராகிக் கொண்டிருந்தன.

மணி சரியாகப் பதினொன்றே கால். வாசலில் 'டக்' 'டக்' கென்ற சத்தம் கேட்டது. எல்லோரும் விரைந்து வாசலுக்கு ஓடினார்கள்.

பாரிஸ்டர் பண்டித ஜவாஹர்லால் நேரு வண்டியை விட்டுக் கீழே இறங்கி வந்து, அப்படியே தம்முடைய அன்னையைத் தழுவிக் கொண்டார்.

அடேயப்பா, ஜவாஹரா அது! ஏழு வருஷத்துக்கு முன், சின்னஞ் சிறு இளைஞனாக இங்கிலாந்துக்குச் சென்றவரா? ஸ்ரீமதி ஸ்வரூப ராணியால் நம்பமுடிய



வில்லை. அவர் வியப்புடன் தம்முடைய மகனையே பார்த்துக் கொண்டிருந்தார்.

ஜவாஹர் இந்தியாவுக்கு வந்த பிறகு அலஹாபாத் ஹைக்கோர்ட்டில் வக்கீலாகப் பதிவு செய்து கொண்டார். ஆனால் அந்தத் தொழிலில் அவருக்குக் கொஞ்சங்கூடப் பற்றே உண்டாகவில்லை. சில மாதங்களுக்குப் பிறகு அந்தத் தொழிலிலேயே அவருக்கு வெறுப்பு உண்டாயிற்று.

அரசியலில் சேரலாமா என்று யோசித்தார். ஆனால், அப்போது காங்கிரஸ் மகா சபை சென்ற போக்கு அவருக்குப் பிடிக்கவில்லை. மேற்படி மகா சபையைச் சேர்ந்த முதிய தலைவர்கள் சிலர் தீவிர அரசியல் போக்கை விரும்பவில்லை. அவர்கள் மிதவாதிகள் என்று அழைக்கப்பட்டார்கள். அவர்களுக்கு ஸ்ரீ கோபாலகிருஷ்ண கோகலே தலைவர். தீவிர வாதிகளுக்கு பாலகங்காதர திலகர் தலைவராக இருந்தார்.

அப்போது காங்கிரஸ் மகா சபையில் மிதவாதிகளின் கட்சிதான் வலுத்திருந்தது. இது ஜவாஹருக்குப் பிடிக்கவில்லை. ஆகவே காங்கிரஸில் சேர்ந்து வேலைசெய்ய அவருக்கு விருப்பம் உண்டாகவில்லை.

வக்கீல் தொழில் பார்க்கவும் இஷ்டம் இல்லை; அரசியலில் கலந்து கொள்ளவும்

விருப்பம் இல்லை. என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்தார் ஜவாஹர்.

சோர்வையும் களைப்பையும் போக்குவதற்காக அவர் அடிக்கடி வேட்டைக்குப் போவது உண்டு. ஒரு நாள் அவர் வழக்கம்போலத் துப்பாக்கியை எடுத்துக் கொண்டு வேட்டைக்குப் போகும் போது சற்று தூரத்துக்கு அப்பால் ஒரு சிறு மான் ஓடுவதைக் கண்டார். உடனே அதைப் பார்த்துச் சுட்டார். மான் சுருண்டோடி வந்து அவருடைய காலடியில் விழுந்தது. அது ஜவாஹருடைய முகத்தைப் பார்த்து "இந்த மாதிரி என்னைக் கொல்லலாமா? நான் என்ன குற்றம் செய்தேன்" என்று கண்ணீர் சொரிந்து கேட்பது போல இருந்தது. இதைக் கண்டதும் ஜவாஹருக்கு அளவு கடந்த இரக்கமும் பரிதாபமும் உண்டாயிற்று. அன்று முதல் அவர் துப்பாக்கியைத் தொடுவதே இல்லை என்று பிரதிக்ஞை செய்து கொண்டார்.

1914-ம் வருஷம் உலக மகாயுத்தம் ஆரம்பமாயிற்று. இந்திய சர்க்கார் யுத்தத்துக்காகப் பணமும் பட்டாளமும் சேர்க்கத் தொடங்கினார்கள். இதைப் பார்த்து இந்தியத் தலைவர்கள் கிளர்ச்சி செய்யத் தொடங்கினார்கள். இந்திய மக்கள் செய்யும் அளவு கடந்த தியாகத்துக்குப் பிரதியாக இந்தியாவுக்குச் சுய ஆட்சி வழங்க வேண்டுமென்று வற்புறுத்தினார்கள்.

ஐரோப்பாவிலே மகா யுத்தமும், இந்தியாவிலே அரசியல் கிளர்ச்சியும் நடந்து கொண்டிருந்த இந்தச் சமயத்திலே ஜவாஹரின் வாழ்க்கையில் ஒரு முக்கிய சம்பவம் நிகழ்ந்தது.

ஒரு நாள் நேருஜியின் வீட்டுக்கு யாரோ புதிதாகச் சில பெண்களும் ஆண்களும் வந்து விருந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். அத்தனை பேரிலும், பதினாறு பதினேழு வயது மதிக்கத் தகுந்த ஒரு யுவதி ஜவாஹரின் தங்கையாகிய ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி பண்டிட்டின் மனதை முற்றிலும் கவர்ந்தாள். ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி அந்த யுவதியையே பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு, தன் அத்தையை நோக்கி, "அந்தப் பெண் யார்?" என்று கேட்டாள்.

"அவளா? உனக்குத் தெரியாதா? உன் அண்ணா அவளைத்தான் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறான்" என்ற பதில் கிடைத்தது.

மரங்கள் துளிர்த்து, புஷ்பங்கள் மலர்ந்து எங்கும் மனோகரமாக விளங்கும் வசந்த பஞ்சமியன்று, ஜவாஹருக்கும் ஸ்ரீமதி கமலாவுக்கும் டில்லியில் வெகு சிறப்பாகக் கல்யாணம் நடந்தது.

• • •

உலக மகா யுத்தம் முடிந்து விட்டாலும் நம்முடைய நாட்டில் மாத்திரம் அமைதி இல்லை; குழப்பம் இருந்து கொண்டே வந்தது. சர்க்காரின் அடக்குமுறை நாளுக்கு நாள் அதிகரித்து வந்தது.

காந்திஜி அப்போதுதான் தென்னாப்பிரிக்காவிலிருந்து வந்திருந்தார். அவர் முதல் முதலாக, இந்திய அரசியல் உலகத்தில் அஹிம்ஸா மகா மந்திரத்தை முழக்கினார். 'ஹிம்சையை ஹிம்சையால் எதிர்க்கக் கூடாது. கொடுங்கோலனை ஆன்ம பலத்தால் வெல்ல வேண்டும்' என்று சொல்லி வந்தார்.

இதற்காக காந்திஜி ஒத்துழையாமை இயக்கத்தை ஆரம்பித்தார். சர்க்காருடைய அடக்கு முறைச் சட்டங்களை எல்லாம் அமைதியான முறையில் எதிர்த்துச் சிறை செல்லுவதுதான் இந்த இயக்கத்தின் நோக்கம்.

இந்தப் புதிய இயக்கம் ஜவாஹருக்கு மிகவும் பிடித்திருந்தது. அதில் அவர் சேர விரும்பினார். ஆனால் மோதிலாலுக்கு அது பிடிக்கவில்லை. தம்முடைய ஏக புத்திரனும் செல்வக் குமாரருமான ஜவாஹர் சிறைக்குப் போவதை அவர் மனம் எப்படிச் சகிக்க முடியும்? தவிரவும், சட்டத்தை மீறுவது என்பது மோதிலாலுக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. மோதிலால்ஜியின் மனதை மாற்றக் கூடிய ஒரு சம்பவம் விரைவில் பாஞ்சாலத்தில் நிகழ்ந்தது.

ஜாலியன் வாலாபாக்கில் கூடியிருந்த இந்திய மக்கள் மீது ஜெனரல் டயர் என்னும் ராணுவ அரக்கன் பீரங்கிப் பிரயோகம் செய்து பலரைக் கொன்று குவித்தான்.

இச் செய்தியைக் கேட்டு தேச முழுவதும் கொதித்தெழுந்தது. மகாத்மாஜியின் தலைமையின் கீழ் ஒத்துழையாமை இயக்கத்தை நடத்துவதென்று ஹிந்துக்களும் முஸ்லிம்களும் திட சங்கல்பம் பூண்டனர்.

பாஞ்சாலப் படுகொலை மோதிலால்ஜியின் மனதைப் பெரிதும் கலக்கியது. சட்ட வரம்புக்கு உட்பட்டு பிரிட்டனிடமிருந்து சுதந்திரம் வாங்க முடியாதென்பதை அவர் கண்ணாகத் தெரிந்து கொண்டார். ஆகவே, அவர் காந்திஜியின் ஒத்துழையாமை இயக்



தந்தை எழுதிய புத்தகத்தில்
மகன் கையெழுத்திட்டுக் கொடுக்கிறான்

சத்தில் சேருவதென்று முடிவு செய்தார். அதற்கு முதல் நடவடிக்கையாக, லட்சக் கணக்காகப் பணம் வந்து கொண்டிருந்த தம்முடைய வக்கீல் தொழிலைத் துறந்தார். ராஜ போகத்தில் வாழ்ந்து வந்த அவர் எளிய வாழ்க்கையைக் கடைப் பிடித்தார்.

அதிலிருந்து மோதிலால் நேருவும் ஜவாஹரும் அரசியலில், முக்கியமாக, ஒத்துழையாமை இயக்கத்தில் தீவிரமாகக் கலந்து உழைக்கத் தொடங்கினார்கள்.

•  •  •

**1921**-ம் வருஷம் டிசம்பர் மாதம் 6-ம் தேதி மாலை, ஆனந்த பவனத்துக்குள் சில போலீஸ் அதிகாரிகள் நுழைந்து ஜவாஹரையும் மோதிலால் நேருவையும் பார்க்க வேண்டும் என்றார்கள்.

ஜவாஹர் வெளியே வந்ததும், அதிகாரிகள் அவரிடம் கைதி வாரண்டைக் காட்டினார்கள். ஒரு க்ஷணம் ஜவாஹருக்குத் 'திக்'கென்றது. முதல் தடவை அல்லவா? மறு வினாடி அவர் சமாளித்துக் கொண்டு உள்ளே போய்த் தந்தையிடம் வாரண்டைக் காட்டினார். மோதிலாலும் தயாரானார். இருவரும் புறப்பட்டு வெளியே வந்தார்கள். அதிகாரிகள் இருவரையும் கைது செய்து அழைத்துப் போனார்கள்.

விசாரணை நடந்தது. ஜவாஹருக்கு மூன்று மாதத் தண்டனையும் மோதிலால்ஜிக்கு ஆறுமாதத் தண்டனையும் கிடைத்தது. ஜவாஹரின் முதல் சிறைவாசம் இதுதான். இதற்குப் பிறகு அவர் எத்தனையோ முறை சிறை சென்றிருக்கிறார். எத்தனை முறை என்பது அவருக்கே ஞாபகம் இருக்கிறதோ என்னவோ?

சௌரி சௌராவில் நடந்த ஒரு பலாத்காரச் செய்கை காரணமாக காந்திஜி ஒத்துழையாமை இயக்கத்தையே நிறுத்திவிட்டார்.

ஜவாஹர் இரண்டாவது தடவையாக ஒன்றரை வருஷம் தண்டனை பெற்று அதை அனுபவித்துவிட்டு வெளியே வந்தார். பிறகு நோயுற்றிருந்த தம்முடைய மனைவியை அழைத்துக்கொண்டு ஐரோப்பாவுக்குப் போய்விட்டு வந்தார்.

1929ம் வருஷம் லாகூரில் காங்கிரஸ் மகாசபை கூடியது. அதற்குப் பண்டித ஜவாஹர் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

இதிலிருந்து அவருடைய பெயர் தேசத்தின் மூலை முடுக்கெல்லாம் ஒலிக்கத் தொடங்கிற்று. யுவர்களுக்கும் யுவதிகளுக்கும் அவர் இதிகாசங்களில் வரும் வீர புருஷராகத் தோன்றினார். அவரைப் புகழ்ந்து பற்பலவிதமான பாட்டுக்களும் கட்டுக் கதைகளும் புனைந்தார்கள்.

ஜவாஹரின் தலைமையில் நடந்த லாகூர் காங்கிரஸில்தான் புகழ் பெற்ற பூரண சுதந்திரத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அது டிசம்பர் மாதம். குளிர் நடுக்கும் அதிகாலை நேரம். பல்லாயிரக் கணக்கான மக்கள் ரவி நதிக்கரையில் திரண்டு பூரண சுதந்திரப் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டார்கள். இந்தப் பூரண சுதந்திரத் தீர்மானத்தின் மூலம் தேசத்தில் ஒரு புதிய யுகம் ஆரம்பமாயிற்று.

ஒரு வருஷம் கழிந்தது. 1930-ல் மீண்டும் தேசத்தில் கொந்தளிப்பு ஏற்பட்டது. பொறுக்கி எடுத்த சில பேர்களோடு காந்திஜி 1930 மார்ச் மாதம் 12-ம் தேதி உப்புச் சட்டத்தை உடைத்தெறிய, புகழ் பெற்ற தண்டி யாத்திரையைத் தொடங்கினார்.

சர்க்கார் காந்திஜியையும் ஜவாஹரையும் கைது செய்து சிறையில் வைத்தார்கள்.

சிறை வாழ்க்கையை ஜவாஹர் ஒரு கஷ்டமாகவோ பாரமாகவோ கருதியதில்லை. அரசியல் வாழ்க்கையில் கிடைக்கும் ஓய்வாகவே அவர் அதைக் கருதுவது வழக்கம். ஜவாஹர் எழுதிய உலகப் புகழ் பெற்ற நூல்களில் பெரும் பாலானவை அவர் சிறையில் இருந்த போது எழுதியவை

தாம். சிறை வாழ்க்கையின்போது ஜவாஹர் தன்னந் தனியே இருந்து இயற்கையின் அழகையும் அற்புதங்களையும் பார்த்து அனுபவிப்பார். மாலை வேளையில் வெட்ட வெளியில் படுத்துக் கொண்டே நீல வானத்தையும் மேகக் கூட்டங்களையும் நட்சத்திரங்களையும் கண்டு களிப்பார். இதைத் தவிர அவர் ஓயாமல் புத்தகங்கள் படித்துக் கொண்டே யிருப்பார்.

ஜவாஹர் இவ்விதம் நிம்மதியாகச் சிறையில் இருந்தபோது, திடீரென்று ஒரு நாள் முன்னறிவிப்பு இல்லாமல் அவரை விடுதலை செய்தார்கள். பின்பு விசாரித்த பிறகு அவருடைய தந்தையின் தேக நிலைமை மிக்க மோசமாக இருப்பதாகத் தகவல் கிடைத்தது.

உடனே ஜவாஹர் அலகாபாத்துக்கு விரைந்து சென்று தந்தையைக் கண்டார். மோதிலால்ஜி அடையாளமே தெரியாமல் அவ்வளவு உருமாறி யிருந்தார். ஜவாஹர்லால் அவரைப் பார்த்து விட்டு சற்றுநேரம் ஸ்தம்பித்து நின்றார். சிங்கம் போன்ற கம்பீரமும் மிடுக்குமுடைய தம்முடைய தந்தையா அவர்? தந்தையும் மகனும் ஒருவரை யொருவர் தழுவிக் கொண்டார்கள் ஜவாஹருடைய கண்ணில் நீர் பெருகியது.

என்னென்ன வைத்தியம் உண்டோ அவ்வளவும் செய்து பார்த்தார்கள். மோதிலால்ஜியின் நோய் குணமாக வில்லை. தமக்கு இறுதிக் காலம் சமீபித்து விட்டது என்பதை அவர் நன்கு தெரிந்து கொண்டார். ஜவாஹர் அவருக்குப் பக்கத்திலேயே இருந்து அவருக்கு வேண்டிய பணிவிடைகளை எல்லாம் செய்து கொண்டு வந்தார்.

தூக்கமே இல்லாமலிருந்த மோதிலால்ஜி ஒரு நாள் சற்றுக் கண் மூடினார். "சரி, அப்பா உறங்குகிறார் போலும்" என்று ஜவாஹர் நினைத்தார். ஆனால் அந்தத் தூக்கம் மோதிலாலுக்கு மீளாத் தூக்கமாயிற்று.

சாவதற்கு இரண்டொரு நாளைக்கு முன்பு அவரைப் பார்க்க காந்திஜி வந்திருந்தபோது, மோதிலால்ஜி அவரிடம், "காந்திஜி, நான் போய் வருகிறேன் சுயராஜ்யத்தைக் கண்ணால் பார்க்க நான் இங்கு இருக்க மாட்டேன். ஆனால் நீங்கள் சுயராஜ்யத்தை விரைவில் அடைவீர்கள் என்பது மாத்திரம் எனக்கு நன்றாகத் தெரியும்" என்றாராம்.

* * *

இந்தியாவுக்கு எத்தகைய அரசியலை வழங்குவது என்பதைப் பற்றி முடிவு செய்வதற்காக 1930-ல் பிரிட்டனில் வட்ட மேஜை மகாநாடு ஒன்று நடந்தது. அந்த மகாநாடு யாதொரு முடிவுக்கும் வராமல் தோல்வி யுற்றுத் திரும்பியது. காங்கிரஸ் ஒத்துழைப்பு இல்லாமல் வட்ட மேஜை மகாநாடு நடக்காது என்பதைத் தெரிந்து கொண்ட இந்திய சர்க்கார், காந்திஜியுடன் ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டார்கள். அதற்கு காந்தி-இர்வின் ஒப்பந்தம் என்று பெயர். அந்த ஒப்பந்தத்துக் கிணங்க காங்கிரஸ் வட்டமேஜை மகாநாட்டில் கலந்து கொள்ள ஒப்புக்கொண்டது.

"ஜவாஹர் தாத்தா"



காங்கிரஸ் மகாசபையின் சார்பாகக் காந்திஜியே வட்டமேஜை மகாநாட்டுக்குப் புறப்பட்டுச் சென்றார்.

அப்போது இந்திய வைசிராயாக இருந்தவர் லார்ட் வெல்லிங்டன். காந்திஜியை வட்டமேஜை மகாநாட்டில் கலந்து கொள்ளும்படியாக வற்புறுத்தி லண்டனுக்கு அனுப்பியவர் அவர்தான். அந்தப் புண்ணியவான் காந்திஜியைக் கப்பலேற்றி லண்டனுக்கு அனுப்பிவிட்டு, இங்கே விதவிதமான அவசரச் சட்டங்களைப் பிரயோகித்து ஜவாஹரைக் கைது செய்தார். வட்டமேஜை மகாநாட்டுக்குப் போய்விட்டு வந்த காந்திஜியையும் கைது செய்து சிறையில் போட்டார் வெல்லிங்டன்!

இந்தத் தடவை ஜவாஹருடைய சிறை வாழ்க்கையில் அவருக்குப் பல நண்பர்கள் கிடைத்தார்கள். எறும்பு, குளவி, தேள் முதலிய நண்பர்கள்!

ஒரு தடவை ஒரு பெரிய கருந்தேள் அங்கு வந்தது. ஜவாஹர் அதைப் பிடித்து, அதன் இடுப்பில் ஒரு நூலைக் கட்டி சுவரில் தொங்கவிட்டார். அதாவது, மற்றத் தேள்களுக்கு அது ஒரு பாடமாக இருக்கட்டும் என்பதற்காக. ஆனால் அந்தப் பொல்லாத தேள் எப்படியோ தப்பித்துக் கொண்டு ஓடிப்போய் விட்டது. ஜவாஹர் சற்றுப் பயந்து போனார். அந்தத் தேள் மறுபடியும் வந்து தன்னை வஞ்சம் தீர்த்துக் கொள்ளுமோ என்று. ஆனால் அது வரவில்லை.

திடீரென்று ஜெர்மனியிலிருந்து ஒரு செய்தி வந்தது:— ஜவாஹரின் மனைவி ஸ்ரீமதி கமலா நேரு மிகவும் ஆபத்தான நிலைமையில் இருப்பதாக. சர்க்கார் ஜவாஹரை விடுதலை செய்தார்கள். ஜவாஹர் உடனே புறப்பட்டு விமான மூலம் ஜெர்மனியை அடைந்தார்.

முதலில் கொஞ்சகாலம் வரை ஸ்ரீமதி கமலா நேரு குணமாகிக் கொண்டு வருவது போலத் தோன்றியது. ஆனால், இறுதியில் எந்த வைத்திய உதவியாலும் பயன்படாமல் அவர் காலமானார்.

ஜவாஹர் தன்னந்தனியாக இந்தியாவுக்குத் திரும்பினார்.

அந்த வருஷம் லக்ஷ்மணபுரியில் கூடிய காங்கிரஸும் அதற்கு அடுத்த வருஷம் பைஸ்பூரில் கூடிய காங்கிரஸும் ஜவாஹரைத் தலைவராகத் தேர்ந்தெடுத்து அவரைக் கௌரவித்தது.

பிரிட்டிஷ் சர்க்கார் அளித்த மாகாண சுயாட்சித் திட்டத்தை நடத்தி வைப்பதற்காகப் பதவி ஏற்கவேண்டும் என்று காங்கிரஸ் மகாசபை நிர்மாணித்தது.

1937-ம் வருஷம் நாடெங்கும் பொதுத் தேர்தல் நடைபெற்றது. ஜவாஹர் சூறாவளியைப் போலக் கிளம்பி, இந்தியாவின் வடகோடியிலிருந்து தென்கோடி வரை உள்ள பல பட்டணங்களுக்கும் கிராமங்களுக்கும் சென்று தேர்தல் சங்கநாதத்தை முழக்கினார். அதன் விளைவாக, ஏழு மாகா





ணங்களில் காங்கிரஸ் மெஜாரிட்டி ஸ்தானங்களைக் கைப்பற்றிக் கொண்டு மந்திரி பதவியையும் வகித்தது.

இந்திய அரசியல் உலகம் ஓரளவு அமைதியாக இருந்து வந்தது. ஆனால் திடீரென்று இரண்டாவது உலக மகா யுத்தம் ஆரம்பமானதும் அந்த அமைதி குலைந்தது. பிரிட்டன் இந்திய மக்களைக் கலந்தாலோசிக்காமல் இந்தியாவை யுத்தத்தில் சேர்த்ததைக் காங்கிரஸ் கடுமையாக எதிர்த்தது. ஏழு மாகாணங்களிலும் பதவி வகித்துவந்த காங்கிரஸ் மந்திரி சபைகள் தங்கள் பதவிகளை ராஜினாமாச் செய்தன. காந்திஜி 'குவிட் இந்தியா' மகா மந்திரத்தை முழக்கி, பிரிட்டிஷ் சர்க்காரை இந்தியாவை விட்டு வெளியே போகும்படியாகக் கூறினார்.

1942-ம் வருஷம் ஆகஸ்ட் மாதம் 8-ம் தேதி இந்திய சரித்திரத்திலேயே மிகவும் முக்கியமான தினமாகும். அன்றைய தினம் பம்பாயில் கூடிய அ. இ. கா. க. கூட்டம், மீண்டும் ஒரு சத்தியாகிரகப் போராட்டத்தை ஆரம்பிப்பதென்று முடிவு செய்தது.

அன்று இரவு பண்டித ஜவாஹர்லால் நேரு பம்பாயில் உள்ள தமது கடைசித் தங்கை ஸ்ரீமதி கிருஷ்ணா ஹத்திஸிங்கின் இல்லத்தில் தங்கி, நண்பர்களுடனும் வேறு சில காங்கிரஸ் தலைவர்களுடனும் இரவு பதினோரு மணிவரை பேசிக் கொண்டிருந்தார். பிறகு, அவர்களுக்கெல்லாம் விடைகொடுத்து அனுப்பிவிட்டு, ஜவாஹர்லால்ஜி தம்முடைய தங்கையுடனும் மைத்துனருடனும் இரவு ஒரு மணிவரை பேசிக் கொண்டே இருந்து விட்டுப் படுத்தார்.

காலையில் யாரோ கதவைத் தட்டும் சத்தம் கேட்டது. அந்த நேரத்தில் யார் கதவைத் தட்டுவார்கள் என்று ஸ்ரீமதி கிருஷ்ணாவுக்குச் சந்தேகம் உண்டாயிற்று. அவர் எழுந்து போய்க் கதவைத் திறந்தார். போலீஸ் அதிகாரிகள் அங்கே நின்றுகொண்டிருந்தார்கள்.

ஜவாஹர்லால்ஜி அளவு கடந்த களைப்புடன் கண்ணுறக்கத் தூங்கிக் கொண்டிருந்தார். ஸ்ரீமதி கிருஷ்ணா அவரை எழுப்பி விஷயத்தைச் சொன்னதும், "அப்படியா! நான் எதிர்பார்த்துக் கொண்டுதான் இருந்தேன்!" என்று ஜவாஹர் அலட்சியமாகக் கூறினார்.

இரண்டொரு நிமிஷங்களில் அவர் தயாராகி விட்டார். அதிகாரிகள் அவரைத் தங்கள் மோட்டாரில் அழைத்துக்கொண்டு போய் விட்டார்கள்.

அன்று ஜவாஹர்லாலை மாத்திரமல்ல, காந்திஜியையும் மற்றுமுள்ள காங்கிரஸ் தலைவர்களையும் சர்க்கார் கைது செய்து எங்கோ ஒரு மர்மமான இடத்துக்கு அழைத்துக் கொண்டு போய்ச் சிறையில் வைத்தார்கள். இந்தச் செய்தியைக்

கேள்விப்பட்டதும் தேசமெங்கும் பொங்கி எழுந்தது. மக்கள் காந்திஜியின் அஹிம்சா போதனையை மறந்து விட்டுப் போலீஸையும் அதிகாரிகளையும் தாக்கத் தொடங்கினார்கள். சில காலம் எங்கும் குழப்பமாக இருந்தது.

ஐரோப்பிய யுத்தம் ஒரு வகையாக முடிவடைந்தது. 1945-ம் வருஷம் சர்க்கார் காங்கிரஸ் தலைவர்களையெல்லாம் விடுதலை செய்து சிம்லாவில் ஒரு மகாநாடு கூட்டி அதற்கு அழைத்தார்கள். அந்த மகாநாட்டில் காங்கிரஸும் முஸ்லிம் லீகும் கலந்து கொண்டது. இந்திய அரசியல் சிக்கலைத் தீர்ப்பது சம்பந்தமாக அம்மகாநாட்டில் விவாதிக்கப்பட்டது. காங்கிரஸ் தலைவர்களுக்கும் ஜின்னாவுக்குமிடையே ஒற்றுமை ஏற்படாததால், அந்த மகாநாடு தோல்வி யடைந்தது.

இச் சமயத்திலே பிரிட்டனில் நடந்த பொதுத் தேர்தலில் தொழிற் கட்சி மெஜாரிட்டி பெற்று, ஆட்லியின் தலைமையின் கீழ் மந்திரி சபை அமைத்தது. ஆட்லி மந்திரி சபை இந்திய அரசியல் முட்டுக் கட்டையை எப்படியாவது தீர்த்து விடுவது என்று உறுதி பூண்டது. இதற்காக அவர்கள் பிரிட்டிஷ் மந்திரி சபைத் தூது கோஷ்டி ஒன்றை இந்தியாவுக்கு அனுப்பி வைத்தார்கள். மேற்படி தூது கோஷ்டியார் இந்தியாவுக்கு வந்து, மூன்று மாத காலம் இங்கே தங்கி இருந்து, ஒரு திட்டம் வகுத்து விட்டுப் போனார்கள்.

இந்தியாவில் ஒரு இடைக்கால சர்க்கார் அமைக்கப் பட்டது. அதில் நேருஜியும், ராஜாஜி, ராஜேந்திரபாபு போன்ற நம்முடைய மதிப்பிற்குரிய பல தலைவர்களும் பதவி ஏற்றார்கள்.

பிரிட்டிஷ் சர்க்கார் லார்ட் வேவலை வைஸிராய் பதவியிலிருந்து நீக்கிவிட்டு அவருக்குப் பதிலாக லார்ட் மௌண்ட் பாட்டனை வைஸிராயாக அனுப்பினார்கள்.

அவருடைய சலியாத முயற்சியாலும் சாதுர்யத்தாலும், சென்ற வருஷம் ஆகஸ்ட் 15-ம் தேதி இந்தியா இரு சுதந்திர இராஜ்யங்களாகப் பிரிக்கப்பட்டது. சுதந்திர இந்திய ராஜ்யத்துக்குப் பண்டித ஜவாஹர் லால் நேரு பிரதம மந்திரியானார்.

* * *

இந்தியா சுதந்தர பாரதத் திருநாடாக ஆயிற்று. ஆனால் இதுவரை உலகத்தில் வேறு எந்த சுதந்தர தேசமும் சமாளிக்காததும் சமாளிக்க முடியாததுமான பல கஷ்டங்களை இன்று இந்தியா சமாளிக்க வேண்டியதாக இருக்கிறது.

ஜவாஹர்லால்ஜி தேசத்துக்காக இரவு பகலாக அரும் தொண்டாற்றி வருகிறார். பிரிட்டிஷ் சர்க்காருடன் இருபது முப்பது வருடகாலம் கடும் போராட்டம் நடத்தி, வாழ்க்கையில் கணிசமான ஒரு பகுதியைச் சிறையில் கழித்த காலத்திலே கூட ஜவாஹர்லால்ஜி கொஞ்சமாவது சோர்வோ களைப்போ அடைந்ததில்லை. எப்போதும் அவருடைய முகத்திலே இளமையின் குதூகலம் ததும்பிக்கொண்டிருக்கும். ஆனால், பதவி பெற்று சென்ற ஒரு வருஷ காலத்துக்குள்ளாக, அவருடைய பால் வடியும் சுபிக்ஷமான முகத்திலே வயோதிகம் காணப்படுகிறது. களைப்பும் சோர்வும் நிறைந்திருக்கிறது. ஜவாஹர்லால்ஜி இது வரை தேசத்துக்குச் செய்துள்ள பல சேவைகளைக் காட்டிலும் இப்போது அவர் செய்யும் சேவையே மகத்தான சேவையாகும். அந்தச் சேவையும் தொண்டும் இன்னும் நெடு காலம் நீடிக்க வேண்டும் என்று இறைவனைப் பிரார்த்திக்கிறோம்.

பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேரு புது டில்லியில் இதுவரையில் கமாண்டர் இன் சீப் வசித்த இந்த மாளிகையில் இனி வசிக்கப் போகிறார்.



# இரவல் பத்திரிகை

பி.ஸி. பலராமன்

அப்பொழுதுதான் ஆபீஸிலிருந்து வீட்டுக்கு வந்து உட்கார்ந்த டைரக்டர் செளந்தர், "என்ன, காப்பி கிப்பி ஏதாவது இருந்தால் கொண்டு வாயேன் !" என்று சொல்லிவிட்டு அன்றையப் பத்திரிகையில் ஆழ்ந்தார்.

"இந்த வீட்டிலே என்றைக்குத்தான் காப்பி இல்லாமல் போச்சு ! வெளியிலே உள்ளவர்களுக் கெல்லாம் இட்டு நிரப்பு கிறேமே !" என்று உள்ளே யிருந்து பதில் வந்தது.

"சிவ சிவ ! சம்பந்தா சம்பந்தம் இல்லாமல் தினம் தினம் இந்தப் பல்லவிதானு? என்றைக்குத்தான் இது ஒழியுமோ ?"

"நான் ஒழிந்து போய்விட்டால் உங்களுக்குச் சனியன் தொலைந்த மாதிரி ! எதிர் வீட்டுக் கருமியைப் பிடித்த சனியனும் என்னுடன் தொலைந்துவிடும் !"

"லக்ஷ்மி, அந்த அப்பாவி மனுஷர் உனக்கு என்ன பாவம் செய்தார் ?"

"'நியூஸ் பேப்ப'ரோடு ஒழியறது போதாதா ? எனக்குப் பாவம் வேறு செய்யணுமா ? 'நியூஸ் பேப்பர்' பைத்தியம் பிடித்தால் தெருவிலே பேப்பர் விற்கிற உத்தியோகத்துக்கு 'அப்ளிகேஷன்' போடச் சொல்லுங்களேன் ! 'பேப்பரைப் படிக்கிறேன், படிக்கிறேன்' என்று வாங்கிக் கொண்டு போய்த் திரும்பக் கொடுக்காமல், மணக்குக் கணக்கில் சேர்த்து விற்பது யாருக்குத்தான் தெரியாது ?"

"ராம ராம ! இதற்குத்தானு இவ்வளவு கோபம் ? லக்ஷ்மி, இதோ பார் ! இந்தச் சின்னக் காரியத்துக்கு யாராவது கோபித்துக் கொள்வார்களோ ? போனால் போகிறுன், நீ போய்க் காப்பி கொண்டு வா !" என்று சொல்லி அவள் வாயை மூடுவதற்குள் "குட் ஈவினிங் ஸார் ! கொஞ்சம் பேப்பர் கொடுக்கிறீர்களா ?" என்று அன்றையப் பத்திரிகையையும் வாங்கிக் கொண்டு போனுர் எதிர் வீட்டு ஏகாம்பரம்.

"ஆமாம், எதிர் வீட்டுக்காரரிடம் பேப்பரை 'படித்து விட்டுத் தருகிறேன்' என்று சொல்லி வாங்கி வந்து, இப்போது விற்கப் போகிறேன் என்று சொல்கிறீர்களே, அவர் என்ன நினைப்பார் ?" என்று கேட்டுக் கொண்டே ஏகாம்பரத்தின் அறைக்கு வந்தாள் ஸ்ரீமதி ஏகாம்பரம்.

"நாசமாய்ப் போச்சு ! நீயே என் குடியைக் கெடுக்கத் தயாராய் விட்டாய் போல இருக்கே ! போ, போ ! உள்ளே போ !" என்று இரைந்தார் ஏகாம்பரம்.

ஸ்ரீமதி ஏகாம்பரம் பதில் சொல்லுவதற்குள், "பழைய பேப்பர் விலைக்குப் போடுகிறீர்களா, சாமி ?" என்று கேட்டுக் கொண்டே ஒருவன் உள்ளே நுழைந்தான்.

"என்ன விலைக்கு எடுத்துக்குவே ?"

"வீசை இரண்டு ரூபாயுங்க, எத்தனை வீசை இருந்தாலும் எடுத்துக்கிறேனுங்க !"

"என்னப்பா, விலையை ரொம்பக் குறைக்கிறயே ?"

"இல்லீங்க, பேப்பரைக் கொண்டு வாங்க ! புதுசா இருந்தா இன்னும் கூட்டித் தாரேன்."

அவ்வளவுதான்; ஏகாம்பரம் உள்ளே விரைந்து சென்று, ஒரு பெரிய பத்திரிகைக்

• • • • • • • • • • • • • • • • •

## வசந்தகால மன்னன்

கவி ரவீந்திரநாத தாகூர் 1936-வருஷம் நேருவைப் பற்றிக் கூறியது:

இந்திய இளைஞர்களுடைய உள்ளத்திலே வீற்றிருப்பதற்கு ஜவாஹர்லாலுக்குப் பூரண உரிமை உண்டு என்பதில் சந்தேகமே இல்லே.

அவருடைய தைரியமோ அளவு கடந்தது; திட சங்கல்பமோ மிகக உறுதியானது. அவர் இவ்வளவு உன்னத நிலைமைக்கு வந்ததற்குக் காரணம், கொஞ்சங்கூடப் பயப்படாமலும் தயங்காமலும் சத்திய நெறியைப் பின்பற்றி வந்ததேயாகும். சூதும் ஏமாற்றமும் மிகுந்த அரசியல் கொந்தளிப்புக்கு மத்தியிலுங்கூட அவர் தூய்மையைக் கடைப்பிடித்து வந்திருக்கிறார்.

சத்திய நெறியில் போகும்போது ஆபத்து வந்தாலுங்கூட, அதற்காக அந்நெறியை விட்டு ஒருகாலும் அவர் பிறழ்ந்ததில்லே.

இன்று வசந்த உற்சவமாகிய ஹோலிப் பண்டிகை. இலைகள் வற்றி வாடிக் கீழே உதிர்ந்துவிட்ட பிறகு இயற்கை புதுவாழ்வை நுகருவதற்காகத் தயாராகிக் கொண்டிருக்கிறது. புதிதாக அரும்பியிருக்கும் தளிர்கள் நமக்கு மகிழ்ச்சியையும் குதூகலத்தையும் உண்டாக்குகின்றன. இந்தச் சமயத்திலே தேசத்தில் அரும்பியிருக்கும் புதுவாழ்வையும் வசந்தத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கவேண்டும். ஜவாஹர்லால் வசந்தகால மன்னன். இளமையின் மலர்ச்சிக்கும் வெற்றிக் களியாட்டத்துக்கும் சின்னமாக அவர் விளங்குகிறார்.

• • • • • • • • • • • • • • • • •

கட்டைத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு வந்து தவறுதலாக மூன்றும் போட்டார். அவன் மிகவும் கவனமாக ஒன்றிரண்டை எடுத்துப் புரட்டிப் பார்த்து விட்டு, "சரி சாமி! மூன்று ரூபாய்னு எடுத்துக்கிறேன்!" என்றான்.

இதை எல்லாம் பார்த்துக் கொண்டிருந்த ஸ்ரீமதி ஏகாம்பரம், "என்ன, பழைய பேப்பர் விலை மூன்று ரூபாய்! அதிசயமா யிருக்கிறதே! நீ என்னடா அப்பா, எதிர் வீட்டு டைரக்டர் மாதிரி ஏமாந்தவன் போலிருக்கே!" என்றாள்.

"எதிர்வீட்டு டைரக்டர் மாதிரி இல்லே; டைரக்டரேதான்!" என்று சொல்லிக் கொண்டே தம் வேஷத்தைக் கலைத்தார் டைரக்டர் சௌந்தர்.

## சிறு கதைப் போட்டி முடிவு



13-7-48

கல்கி 1947-ம் வருஷத்துச் சிறுகதைப் போட்டிக்கு வந்திருந்த 1677 கதைகளில் பின்வரும் சிறுகதைகள் பரிசுக்குரியனவாக மத்தியஸ்தர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டன:—

முதல் பரிசு ரூ 500 {
"மடை காவல்" வி. எஸ். சுப்பையா ரூ 250
"பாட்டி சொன்ன கதை" கேசவ சுப்பிரமணியம் ரூ 250

இரண்டாவது பரிசுகள் ரூ 100

1. "திருமணம்" [illegible] ரூ 100
2. "புதுவாழ்வு" [illegible] ரூ 100
3. "[illegible]" [illegible] ரூ 100
4. "[illegible]" [illegible] ரூ 100
5. "[illegible]" [illegible] ரூ 100

"கல்கி" காரியாலயம் 13-7-48

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
ரா. கிருஷ்ணமூர்த்தி

முதல் பரிசுக்குச் சம உரிமை பெற்ற இரண்டு கதைகளில் ஒன்றாகிய ஸ்ரீ வி.எஸ். சுப்பையா எழுதிய "மடை காவல்" அடுத்த வாரத்துக் கல்கி இதழில் பிரசுரமாகிறது.

# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

## 39. லஞ்சப் பேய்

ஜோகானிஸ்பர்க்கில் தம்பி வக்கீல் தொழில் நடத்த ஆரம்பித்தவுடனேயே காந்திஜி ஆசிய இலாகாவைக் கவனிக்க ஆரம்பித்தார். அந்த இலாகாவின் தலைமை ஸ்தானம் ஜோகானிஸ்பர்க் நகரந்தான். ஆசிய இலாகாவின் உத்தியோகஸ்தர்கள் இந்தியர்கள் - சீனர்கள் முதலிய ஆசியாக் காரர்களைச் சக்கைப் பிழிந்து கொண்டிருந்தார்கள். இலாகா நிர்வாகத்தில் லஞ்சப் பேய் தாண்டவமாடிக் கொண்டிருந்தது. தினந்தோறும் காந்திஜியிடம் யாரேனும் வந்து முறையிட்டுக் கொண்டிருந்தார்கள். "டிரான்ஸ்வாலில் ஏற்கெனவே வசித்தவர்களுக்கு இங்கு வர அநுமதிச் சீட்டுக் கிடைப்பதில்லை. உரிமையில்லாதவர்கள் நூறு பவுன் லஞ்சம் கொடுத்து விட்டு வந்து விடுகிறார்கள். இந்த அநியாயத்துக்குக் கேள்வி முறையில்லையா? தாங்கள் தான் பரிகாரம் தேட வேண்டும்!" என்று முறையீடுகள் வந்து குவிந்தன.

இந்த லஞ்சப் பேயைத் தொலைப்பதற்குக் காந்திஜி கங்கணம் கட்டிக் கொண்டார். ஆசிய இலாகாவைத் தூய்மைப்படுத்தினாலன்றித் தாம் ஜோகானிஸ்பர்க்கில் தங்கியதில் பயன் ஒன்றுமில்லை யென்று கருதினார்.

எனவே ஆசிய இலாகாவின் ஊழல்களைப் பற்றிச் சாட்சியங்கள் திரட்ட ஆரம்பித்தார். போதுமான சாட்சியங்கள் கிடைத்ததும் போலீஸ் கமிஷனரிடம் சென்றார். அதிர்ஷ்டவசமாக, டர்பன் போலீஸ் தலைவரைப் போல் இங்கேயும் போலீஸ் தலைவர் மனச் சாட்சியுள்ள நீதிமானாக இருந்தார். காந்திஜி கூறியதை வெகு பொறுமையுடன் செவி கொடுத்துக் கேட்டார். சாட்சியங்களைப் பார்த்தும், சாட்சிகளை அழைத்துக் கேட்டும் திருப்தி செய்து கொண்டார். ஆனாலும் வழக்குத் தொடுக்கும் விஷயத்தில் அவருக்கு உற்சாகம் ஏற்படவில்லை.

இதற்குக் காரணம் என்னவென்றால், தென்னாப்பிரிக்காவில் குற்ற வழக்குகளின் விஷயத்தில் ஜூரி விசாரணை முறை அமுலில் இருந்தது. அதாவது கோர்ட்டுகளில் குற்ற விசாரணை நடக்கும்போது மாஜிஸ்ட்ரேட்டுக்கு உதவி செய்வதற்காக சமூகப் பிரமுகர்களில் சிலர் ஜூரிகளாக நியமிக்கப்படுவார்கள். எதிரி குற்றவாளியா இல்லையா என்று கடைசியில் ஜூரிகள் தங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவிப்பார்கள். அந்த அபிப்பிராயத்தை யொட்டியே மாஜிஸ்ட்ரேட் தீர்ப்பளிப்பார்.

வெள்ளைக்காரன் மீது வழக்கு நடந்தால் வெள்ளைக்காரர்களே ஜூரிகளாக வருவார்கள். வெள்ளைக்காரர் மீது கறுப்பு மனிதர் தொடரும் வழக்குகளில் வெள்ளைக்கார ஜூரிகள் வெள்ளைக்காரருக்குச் சாதகமாகவே தீர்ப்புச் சொல்வார்கள். ஆகையால் விசாரணையில் நியாயம் கிடைப்பது கடினம்; வெள்ளைக்காரக் குற்றவாளி தண்டிக்கப்படுவது கடினம்.

ஆயினும் போலீஸ் கமிஷனர் நடவடிக்கை எடுத்துப் பார்ப்பதாகக் கூறினார். "ஜூரிகள் விடுதலை செய்து விடுவார்கள் என்பதற்காக நாம் இப்பேர்ப்பட்டவர்களைச் சும்மா விட்டுவிடக் கூடாது. நம்முடைய கடமையைச் செய்து விடுவோம், இவர்களை முயற்சித்துப் பார்ப்போம்" என்றார்.



வும் தாக்கி ஒழிக்க முயலவேண்டும். ஆனால் அதற்குப் பொறுப்பான மனிதர்களை எதிர்த்துத் தாக்குதல் கூடாது. அப்படிச் செய்தல் நம்மை நாமே தாக்கிக் கொள்வதாகும். நாம் எல்லாரும் ஒரே மண்ணில் செய்த பாண்டங்கள்; ஒரே கடவுளின் புதல்வர்கள். மனிதர் எல்லாரிடத்தும் தெய்வீக சக்தி இருக்கின்றது. ஒரு மனிதனுக்குத் தீங்கு செய்தால் அது மனித குலத்துக்கே தீங்கு செய்ததாகும். ஒரு மனிதனை அலட்சியம் செய்தால் தெய்வத்தை அலட்சியம் செய்ததாகும்.”

## 40. கஸ்தூரிபாய்த் தெய்வம்

காந்தி மகாத்மா பெரும்பாக்கியம் செய்தவர்; அதனாலேதான் கஸ்தூரிபாய் அவருடைய வாழ்க்கைத் துணைவியாக வாய்த்தார் என்று சொல்ல வேண்டும். சாதாரணமாக இந்தியப் பெண்மணிகள் மிக்க பொறுமை வாய்ந்தவர்கள். கணவன்மார்களுக்கு இணங்கி நடப்பதற்காக எத்தனையோ கஷ்டங்களைச் சகித்துக் கொள்ளக் கூடியவர்கள். ஆனால் காந்திஜியைப் பதியாகக்கொண்ட பெண்மணிக்குச் சாதாரண ஸ்திரீகளுக்கு உள்ள பொறுமை இருந்தால் போதுமாயிருந்திராது. குடும்ப வாழ்க்கை, சமூக வாழ்க்கை, அரசியல் வாழ்க்கை ஆகியவற்றில் காந்திஜி நடத்திய சோதனைகளுக்கெல்லாம் உடன்பட்டிருப்பதற்கு எல்லையற்ற அசாதாரணப் பொறுமை ஸ்ரீமதி கஸ்தூரிபாய்க்கு இருந்திருக்க வேண்டும்.

காந்தி மகாத்மாவை இந்தியாவின் ஒப்பற்ற தலைவர் என்றும் உலகசிரேஷ்டர் என்றும் பிற்காலத்தில் உலகம் ஒப்புக் கொண்டு கொண்டாடியது. ஆகையால் இக்காலத்தில் நமக்கு “காந்திஜி எவ்வளவு பெரிய மனிதர்? எப்பேர்ப்பட்ட மகா புருஷர்?—அவரை மணந்து கொண்டது கஸ்தூரிபாயின் பாக்கியம் அல்லவா? அத்தகைய புகழ் வாய்ந்த கணவருக்குக் கஸ்தூரிபாய் ஒத்து நடந்ததில் ஆச்சரியம் என்ன?” என்று தோன்றக் கூடும்.

ஆனால் காந்திஜி வாழ்க்கை தொடங்கிய காலத்திலும் தென்னாப்பிரிக்கா போராட்டத்தை ஆரம்பித்த காலத்திலும் அவர் இவ்வளவு பிரசித்த மடையப்போகிறார், மகாத்மா ஆகப்போகிறார் என்று யாருக்குமே தெரியாதல்லவா? ஸ்ரீமதி கஸ்தூரிபாய்க்கு அந்த நாளில் “நம்முடைய கணவர் இப்படி ஒரு நிலையாக இல்லாமல் குடும்பத்தைப் பாழாக்குகிறாரே?” என்று தோன்றுவதுதான் இயல்பல்லவா?

அப்படியிருந்தும் கணவருடைய காரியங்களுக்கெல்லாம் கஸ்தூரிபாய் உடன்பட்டுத்தான் இருந்தார். பல சமயங்களில் அவர்களுக்குள் விவாதங்கள் ஏற்பட்டிருக்கின்றன. காந்திஜியின் சமதர்ம சீர்திருத்த ஆவேசம் கஸ்தூரிபாயைப் பெருந்தொல்லைக்கு ஆளாக்கியிருக்கிறது. சில சமயம் காந்திஜியைக் கஸ்தூரிபாய் எதிர்த்துப் போராடியதும் உண்டு. ஆயினும் கடைசியாகக் கணவருடைய விருப்பத்தையே முடிவான தீர்ப்பாகக் கொண்டு காரியத்தில் நடந்து கொண்டிருக்கிறார்.

தென்னாப்பிரிக்காவில் காந்திஜி குடித்தனம் நடத்திய காலத்தில் கணவருக்கும் மனைவிக்கும் அத்தகைய போராட்டம் ஒன்று நடைபெற்றது. மிகப் புனிதமான அந்த சம்பவத்தைப் பற்றிக் காந்திஜியின் வாய் மொழியிலேயே நாம் தெரிந்து கொள்வதுதான் உசிதம். அவர் எழுதியுள்ளதை அப்படியே கீழே தந்திருக்கிறேன். அதைப் படிக்கும் போது காந்திஜி உயர்ந்தவரா, கஸ்தூரிபாய் உயர்ந்தவரா என்ற கேள்வி நம் மனதில் உதயமாகும். அதைப் பற்றி முடிவு செய்வது அவ்வளவு சுலபமாயிராது.



மேற்படி சம்பவத்தைப் பற்றி, “ஒரு புனித ஞாபகம்” என்ற தலைப்பின் கீழ் காந்திஜி எழுதியிருக்கும் வரலாறு இதுதான்:—

## பிள்ளைப் பிராயத்தில்....

ஜவாஹர் குழந்தையாக இருந்தபொழுது பிடிவாதக்காரரா யிருந்தாராம். எதற்கெடுத்தாலும், அழ ஆரம்பித்து விடுவாராம். 'ஏன் அழுகிறாய்?' என்று யாராவது கேட்டுவிட்டால், கேட்டவரைச் சுட்டிக் காட்டி, 'இவன் என்னை அடித்து விட்டான்' என்று சொல்லுவாராம். பக்கத்தில் இருப்பவர் 'என்ன?' என்று கேட்டு விட்டால் முன் சொன்னவரை விட்டு விட்டு, கேட்டவரையே அடித்தவர் என்று சொல்லுவாராம். இம்மாதிரி, கேட்பவர்கள் மாற மாற, அடித்தவர்களின் பெயரையும் மாற்றி மாற்றி சொல்லிக்கொண்டே போவாராம்.

---

"டர்பனில் வக்கீல் தொழில் நடத்திக் கொண்டிருந்தபோது என்னுடைய காரியாலய குமாஸ்தாக்கள் பெரும்பாலும் என்னுடன் தங்கி இருப்பது வழக்கம். அவர்களில் ஹிந்துக்களும், கிறிஸ்தவர்களும் இருந்தார்கள். குஜராத்திகளும், தமிழர்களும் இருந்தனர். அவர்களை என் குடும்பத்தைச் சேர்ந்தவர்களாக நடத்தி வந்தேன். இதற்கு என் மனைவி எப்போதேனும் குறுக்கே நின்றால் அப்போது எங்களுக்குள் மனஸ்தாபம் ஏற்படும்.

என்னுடைய வீடு மேனாட்டு முறையில் கட்டப்பட்டிருந்தது. ஆதலின் அதன் அறைகளிலிருந்து அழுக்குத் தண்ணீர் வெளியே போவதற்குச் சாக்கடைகள் அமைக்கப்படவில்லை. அறைகளில் இவ்வாறு சாக்கடை வைத்தல் கூடாதுதான். எனவே, ஒவ்வோர் அறையிலும் அழுக்கு நீர்ப்பாண்டம் ஒன்று வைக்கப்பட்டிருந்தது. இப்பாண்டங்களைச் சுத்தம் செய்வதற்கு வேலைக்காரன் வைப்பதற்குப் பதிலாக நானும், என் மனைவியுமே அவற்றைச் சுத்தம் செய்து வந்தோம். வீட்டில் கொஞ்சகாலம் இருந்து பழகிவிட்ட குமாஸ்தாக்கள், அவரவர்கள் உபயோகித்த பாண்டங்களை அவரவர்களே சுத்தம் செய்து வந்தார்கள். இங்ஙனமிருக்கையில் புதிதாக ஒரு கிறிஸ்தவ குமாஸ்தா வந்து சேர்ந்தார். அவருடைய பெற்றோர்கள் தீண்டா வகுப்பினர். புதிதாக வந்தவராதலின் அவருடைய படுக்கையறையைச் சுத்தம் செய்தல் எங்களுடைய கடமையாயிருந்தது. என் மனைவி, மற்றவர்களுடைய பாண்டங்களைச் சுத்தம் செய்வதில் எவ்வித ஆட்சேபமும் கூறியது கிடையாது. ஆனால் தீண்டாதார் ஒருவரின் பாண்டத்தைச் சுத்தம் செய்ய வேண்டி வந்தபோது அவளால் பொறுக்க முடியாமல் போயிற்று. இதன் பயனாக எங்களுக்குள் மனஸ்தாபம் விளைந்தது. நான் பாண்டங்களைச் சுத்தம்செய்வதும் அவளால் சகிக்க முடியவில்லை. அவளுக்கும் செய்யப் பிரியமில்லை. கோபத்தினால் சிவந்த கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாகப் பெருக தக்கக் கோபம் பார்வையிலேயே என்னைக் கடிந்தவளாய்க் கையில் பாண்டத்துடன் அவள் ஏணியின் வழியே இறங்கி வந்த காட்சி இப்போதும் என்னைக் கண் முன் நிற்கிறது.

என் மனைவியிடம் நான் வைத்திருந்த அன்பு மிகக் குரூரமான வகையைச் சேர்ந்தது. என்னை அவளுடைய உபாத்தியாயனாகக் கருதி யிருந்தேன். எனவே அவளிடம் எனக்கிருந்த குருட்டுத்தனமான அன்பின் காரணமாக அவளைப் பெரிதும் உபத்திரவப் படுத்தி வந்தேன்.

அவள் பாண்டத்தைத் தூக்கிச் சென்றதுடனேயே நான் திருப்தி அடையவில்லை. அதை அவள் சந்தோஷத்துடனே செய்ய வேண்டும் என்று விரும்பினேன். எனவே, உரத்த சத்தம் போட்டு, "என்னுடைய வீட்டில் இம்மாதிரி மூடத்தனத்தைப் பொறுக்க முடியாது" என்றேன்.

அம்மொழிகள் கூரிய அம்புகளைப்போல் அவளுடைய இதயத்தில் தைத்தன.

"உங்கள் வீட்டை நீங்களே வைத்துக் கொண்டு என்னைத் தொலைத்து விடுங்கள்" என்று அவள் கூச்சலிட்டாள். அப்போது என்னை நானே மறந்து விட்டேன். என் இதயத்திலிருந்த இரக்க ஊற்று வற்றிப் போயிற்று. அவளுடைய கையைப் பிடித்து ஏணிக்கு எதிரே இருந்த வாயிற்படிக்கு இழுத்துக் கொண்டு போனேன். வெளியே தள்ளுவதற்காகக் கதவைத் திறந்தேன்.

அவள் கன்னங்களின் வழியாய்க் கண்ணீர் தாரை தாரையாய் வடிந்து கொண்டிருந்தது. அவள் கூறியதாவது:—'உங்களுக்கு வெட்கமில்லையா? இப்படிச் சுய உணர்வு போய்விட வேண்டுமா? எனக்குப் போக்கிடமெங்கே? தஞ்சமளிப்பதற்கு இங்கு என் பெற்றோர்களாவது, உறவினர்களாவது இருக்கிறார்களா? நீங்கள் என்னை உதைத்

நாளும், அடுத்தாளும் நான் பொறுத்துக் கொள்ள வேண்டியதுதான். ஆண்டவன் ஆணை! கதவைச் சாத்துங்கள். யாரா வது பார்த்துச் சிரிக்கப் போகிறார்கள்!' என்றான்.

வெளிக்குக் காட்டிக் கொள்ளவில்லை யாயினும் உள்ளுக்குள் மிகவும் வெட்கப் பட்டேன். கதவைச் சாத்தினேன். என் மனைவி என்னை விட்டு எங்கும் போக சம்மதிக்கவில்லை என்றால், நானும் அவளை விட்டுப் பிரியமுடியாது. நாங்கள் எத்தனையோ சண்டை போட்டிருக்கிறோமாயினும், முடி வில் சமாதானம் அடைந்து விடுவோம். அளவற்ற பொறுமையுடையவளாதலால் என் மனைவியே ஒவ்வொரு முறையும் வெற்றி யடைவாள்.

இன்னமை நிஜம் பாரபட்சமின்றி மேற் படி நிகழ்ச்சியை நான் கூறக் கூடியவனு யிருக்கிறேன். இந்தப் புனித நிகழ்ச்சியை நான் கூறியதிலிருந்து தற்போது நானும் என் மனைவியும் தம்பதிகளுக்கு இலக்கியமா யிருப்பதாக யாரும் முடிவு செய்ய வேண் டாம். எங்களுக்குள் பூரண லட்சிய ஒற் றுமை இப்போதும் இல்லை. ஸ்ரீமதி கஸ் தூரிபாய்க்குத் தனிப்பட்ட ஏதேனும் இலட்சி யங்கள் உண்டாவென்று ஒருகால் அவ ளுக்கே தெரியாமலிருக்கலாம்.

ஆனால் கஸ்தூரிபாயிடம் ஓர் அருங்குணம் இருக்கிறது. மற்ற மனைவிமார் பெரும்பாலோரிடம் இக்குணம் உண் டென்று சொல்லலாம். அது யாதெனில் விருப்பத்துடனோ விருப்ப மின்றியோ, அறிந்தோ, அறியாமலோ, என் அடிச் சுவட்டைப் பின்பற்றி நடப்பதால் அவள் மேன்மையுறலாம் என்று கருதி வந்திருக் கிறாள். புலனடக்கத்துடன் வாழ்க்கை நடத்த நான் செய்த முயற்சிகளுக்கு அவள் எப்பொழுதும் குறுக்கே நின்றது கிடையாது. ஆதலின் எங்களுடைய அபிப்பிராயங்களில் மிக்க வேற்றுமை இருந்த போதிலும், எங்களுடைய வாழ்க்கை எப்போதும் திருப்தியும் மகிழ்ச்சியும் வளர்ச்சியும் உடைய தாய் இருந்து வந்திருக்கிறது."

* * *

## ஒரு முடிவும் இல்லை!

ஒரு தடவை ஒரு கூட்டத்திற்குப் பண்டித ஜவாஹர்லால் நேரு தலைமை வகித்தார். அந்த கூட்டத்தில் ஒரு வரட்டுக் கர்வம் கொண்ட தர்க்க சாஸ்திரப் பேராசிரியர், காங்கிரஸ் மகாசபையின் நடவடிக்கைகள் எல்லாம், நடைமுறைக்கு ஒவ்வாதவை யென்றும் வெறும் பகற்கனவு என்றும் சொல்லிப் பரிகசித்தார். கடைசியில் 'நுண்ணறிவு படைத்த அரசியல் வாதிகள், கற்பனையுலகில் மட்டும் ஈடுபட்டிராமல் உண்மையுலகுக்கு வந்து ஒரு முடிவுக்கு வரவேண்டும் என்று வேண்டிக் கொள்ளுகிறேன்' என்று கேலியாகக் கூறி விட்டுத் தம் ஆசனத்தில் அமர்ந்தார்.

ஜவாஹர்லால்ஜியின் முகத்தில் ஒரு குறுநகை தோன்றியது. அவர் பேச ஆரம்பித்தார்:—"நம் பேராசிரிய நண்பரின் பிரசங்கத்தைக் கேட்ட பொழுது எனக்கு ஒரு கிரேக்கப் பேராசிரியரின் நினைவு வந்தது. அவருக்கு எத்தனையோ உண்மையான சிஷ்யர்கள் இருந்தார்கள். ஒரு நாள் தற்செயலாகப் பேராசிரியர் ஒரு சேற்றுக் குழியில் சிக்கிக் கொண்டு விட்டார். அவர் அதிலிருந்து வெளியே வர முடியாமல் தவித்தார். அதே சமயம் அவருடைய அன்புக்குப் பாத்திரமான சிஷ்யன் ஒருவன் அவ்வழியே வந்தான். குரு இருக்கும் நிலைமையைக் கண்ட சிஷ்யன் மனதுக்குள் 'இவரைச் சேற்றிலிருந்து அகற்றுவதனால் என்ன பிரயோஜனம்? அகற்று விட்டால் என்ன குடி முழுகிப் போய்விடும்' என்று சிந்திக்கலானான். அவனுடைய மூளை குழம்பிற்றே தவிர அவனால் ஒரு முடிவுக்கும் வர முடியவில்லை. கடைசியில் வெகு நேரம் வரை மூளையைக் குழப்பிக் கொண்ட பிறகு 'நாம் ஒரு முடிவுக்கும் வருவதற்கில்லை' என்ற அருமையான முடிவுக்கு வந்து விட்டான்."

ஜவாஹர்லால்ஜியின் பேச்சைக் கேட்டுக் கூட்டத்தில் சிரிப்பொலி எதிரொலித்தது. தர்க்கப் பேராசிரியரும் நாணத்தினால் தலை கவிழ்ந்தார்.

# கம்பர் தரும் காட்சி



டி. கே. சி.

## 218. ராமனது தூதன் யான்!

“அடடா, என்ன பாதகமெல்லாம் செய்திருக்கிறேன்!” என்று நெஞ்சம் இடிகிறது சீதைக்கு.

> வஞ்சனை மானின்பின்
> மன்னைப் போக்கி, என்
> மஞ்சனை வைது, பின்
> வழிக்கொள் வாய்என,—
> நஞ்சனை யான்அகம்
> புகுந்த நங்கையான்
> உய்ஞ்சனன் இருத்தலும்
> உலகம் கொள்ளுமோ.

[வஞ்சனை மானின்பின் மன்னைப் போக்கி: மான் வேஷம் போட்டிருந்த மாரீசன்பின் ராமனைப் போகச் செய்து; என் மஞ்சனை வைது: என் பிள்ளைக்குச் சமானமான அந்த லக்ஷ்மணனை வைது; பின் வழிக் கொள்வாய் என: ராமன் பின் போய் விடு என்று சொல்லி விட்டு; நஞ்சு அனையான் அகம் புகுந்த நங்கை யான்: விஷத்துக்குச் சமானமான அந்த ராவணன் வீட்டுக்குள் வந்திருக்கும் நான்; உய்ஞ்சனன் இருத்தலும்: உயிரோடு பிழைத்திருந்தாலே; உலகம் கொள்ளுமோ; உலகத்தார் ஒப்புக் கொள்ளுவார்களா?]

***

துயர வெறியானது சீதையின் மனசை என்ன பாடெல்லாமோ படுத்துகிறது. ராம லக்ஷ்மணர்கள் தன்னை வந்து மீட்கவில்லை அல்லவா! அவர்கள் அன்பே யில்லாதவர்கள். தன்னை மீட்காத பழி அவர்களைச் சாரட்டும் என்றெல்லாம் எண்ணத் தோன்றுகிறது—துயர வெறியினால்தான்.

> அன்பழி சிந்தையர்
> ஆய ஆடவர்
> வன்பழி சுமக்கினும்
> சுமக்க,— வான்உயர்
> துன்பழி பெரும்புகழ்க்
> குலத்துள் தோன்றினேன்,
> என்பழி துடைப்பவர்
> என்னின் யாவரே.

[அன்பு அழி சிந்தையர் ஆய ஆடவர்: அன்பில்லாத இதயத்தவரான அந்த ஆடவர்கள்; வன் பழி சுமக்கினும் சுமக்க: பெரும்பழி அவர்களைச் சேர வேண்டியது இல்லைதான், ஆனாலும் சேரவே செய்கிறது,—அவர்கள் காரியம் எப்படியேனும் இருக்கட்டும்; வான் உயர் துன்பு அழி பெரும் புகழ்க் குலத்துள் தோன்றினேன்: வானை அளாவும்படியாகத் துன்பம் பலருக்கும் வந்திருக்கிறது; அவ்வளவு துன்பத்தையும் தீர்த்துப் பெரும் புகழ் படைத்திருக்கிறார்கள் என் தந்தையின் குலத்தவர். அந்தக் குலத்தில் நான் தோன்றியிருக்கிறேன்; என் பழி துடைப்பவர்: அந்தக் குலத்தில் தோன்றிய என்னுடைய பழியைத் தீர்ப்பவர்; என்னின் யாவரே: என்னை அல்லாமல் வேறு யார்? — ராம லக்ஷ்மணர்கள் அல்ல என்பது விஷயம்.

குறிப்பு:—துன்பம் வந்த காலத்தில் காரணமில்லாமலே தனக்கு வேண்டியவர்களைக் குறை கூறுதல், மக்கள் இயல்பில் ஒன்று. கவிஞர் அந்த இயல்பை இந்தச் செய்யுளில் அழகாகக் காட்டுகிறார்.]

***

சிறிது நேரங் கழித்து மனசு வேறு விதமாய் வேலை செய்கிறது. எந்த விதத்திலும் தன் காரணமாக ராம லக்ஷ்மணர்களுக்கு அவமானம் உண்டாகிவிடக் கூடாதே என்ற எண்ணம் மேலிடுகிறது.

> வல்இயல் மறவர், தம்
> வடுவின் தீர்பவர்
> வெல்லினும் வெல்க, போர்
> விளிந்து வீடுக;
> இல்இயல் அறத்தையான்
> இறந்து வாழ்ந்தபின்
> சொல்லிய என்பழி
> அவரைச் சுற்றுமோ?

[வல் இயல் மறவர்: வலிமை யெல்லாம் பொருந்திய வீரர்களாகிய ராம லக்ஷ்மணர்; தம் வடுவின்த் தீர்ப்பவர்: தங்களுடைய கடமையைச் செய்து நல்ல பெயர் வாங்கிக் கொள்பவர்கள்தான்; (வடு: பழி); வெல்லினும் வெல்க போர் விளிந்து வீடுக: வென்றுக

வெல்லட்டும் நல்லது தான். அல்லது போரில் மடிந்து போகட்டும் அதைப் பற்றியும் நான் கவலைப்பட வேண்டியதில்லை; இச் இயல் அறத்தை: இல்லறம் என்கிற உயர்ந்த வாழ்க்கையை; நான் இறந்து வாழ்ந்தபின்: உயிரை விட்டு அதன் மூலமாகவே நான் வாழ்ந்து உலகத்துக்குக் காட்டியபின்: சொல்லிய என்பழி: என்னைப் பற்றிக் கூறும் பழிச் சொற்கள்; அவரைச் சுற்றுமோ: அவரைப் பற்றுவதற்கு காரணமே இல்லை.

குறிப்பு:—இல்லற வாழ்க்கை என்பது உயிர் வாழ்வதோடு நிற்பதல்ல. இறந்த பின்னும் புகழாக நிற்கிறது என்பது விஷயம். சீதையின் துயரமும் ஆற்றாமையும் அபூர்வமான வேகத்தோடு "இறந்து வாழ்ந்தபின்" என்ற முரண் தொடையில் கிடக்கிறது.]

* * *

இல் வாழ்க்கையை இறந்துதான் வாழ வேண்டும் என்ற துணிவு ஏற்பட்டுவிட்டது சீதைக்கு. அதுவே தர்மம் என்று பட்டுவிடுகிறது சமயம் வாய்த்தது என்றும் எண்ணுகிறாள்.

ஆதலால் இறத்தலே
 அறத்தின் ஆ(று) எனா;—
'சாதல்காப் பவரும்,என்
 தவத்தில் சாய்ப்பினார்;
சதுர(து) இடரும்வே(று)
 இல்லை,' என்றொரு
போதுலாம் மாதவிப்
 பொதும்பர் எய்தினாள்.

[ஆதலால் இறத்தலே அறத்தின் ஆறு எனா: காரியம் அப்படியிருக்கிறபடியால் இறப்பதே தர்ம வழியாய் இருக்கிறது என்று எண்ணி; சாதல் காப்பவரும் என் தவத்தில் சாய்ப்பினார்: என்னைச் சாவாமல் காத்துக் கொண்டிருக்கிற அரக்கிகளும் எப்படியோ சோர்ந்து கிடக்கிறார்கள்—என் தவத்தினால் தான்; அனுமன் செய்த காரியம் என்று தெரியாதுதானே; போதுலாம் மாதவிப் பொதும்பர் எய்தினாள்: புஷ்பம் நிறைந்துள்ள மாதவிக் கொடிப் பந்தலை அடைந்தாள். உயிரை மாய்த்துக் கொள்ளத்தான்.]

* * *

அந்த சமயத்தில் சீதையைப் பார்த்துக் கொண்டான் அனுமன். அவளது கருத்தை இன்னதென்றும் தெரிந்துகொண்டான். பயமும் உண்டாய்விட்டது அவனுக்கு.

கண்டனன் அனுமனும்,
 கருத்தும் எண்ணினான்,
கொண்டனன் துணுக்கம்,மெய்
 நீண்டக் கூகவான்
அண்டர்நா யகன்அருள்
 தூதன் யான்'எனாத்
தொண்டைவாய் மயிலினைத்
 தொழுது தோன்றினான்.

[கொண்டனன் துணுக்கம்: அப்படியே பயம் வந்து விட்டது. ஆனால்; மெய் நீண்டக் கூகவான்: அவள் தேகத்தைத் தொட்டுத் தடுக்க நேரமும் இல்லை; உடனே பேசவே தோன்றிற்று. அண்டர் நாயகன் அருள் தூதன் யான் எனா: தேவாதி தேவனான ராமன் அருளி அனுப்பிய தூதன் நான் என்று சொல்லிக்கொண்டே; தொண்டைவாய் மயிலினைத் தொழுது தோன்றினான்: சிவந்த வாய்ச் சீதாபிராட்டியைத் தொழுத வண்ணமாய் அவள் முன் வந்து நின்றான்.]

நாடகத்துக்கு அரிய சந்தர்ப்பம் கற்பிக்கப்பட் டிருக்கிறது.

* * *

சீதா பிராட்டியைக் கண்டு விட்டானும் அனுமன். ஒரே ஆனந்தம். "எனக்குக் கிடைத்தது பாக்கியம்! வந்துவிட்டேன் அல்லவா?" என்கிறான்.

அடைந்தனென் அடியனேன்;—
 இராமன் ஆணையால்
குடைந்துல கனைத்தையும்
 நாடுங் கொட்பினால்
மிடைந்தவர் உலப்பிலர்;—
 தவத்தை மேவலாள்,
மடந்தை! நின் சேவடி
 வந்து நோக்கினேன்.

[அடைந்தனென் அடியனேன்: இந்த இடத்தில் வந்து சேர்ந்து விட்டேன் அடியவனான நான்; இராமன் ஆணையால்; ராமனது கட்டளையினால்; குடைந்துலகனைத்தையும் நாடும் கொட்பினால்; உலகத்தில் முக்கு மூலைகளெல்லாம் துருவி உள்ளே தேடும் ஆத்திரத்தோடு; மிடைந்தவர் உலப்பிலர்: திரண்டவருடைய எண்ணிக்கையைச் சொல்ல முடியாது—விஷயம் அப்படி இருக்க; தவத்தை மேவலாள் மடந்தை நின் சேவடி வந்து நோக்கினேன்: முன் ஜன்மத்தில் தவம் செய்த காரணத்தால் பிராட்டியே, உன் திருவடியை வந்து காணக் கிடைத்தது எனக்கு.]

* * *

சீதையின் கஷ்டத்தையும் மன வருத்தத்தையும் உணர்ந்து கொண்ட அனுமன் அவளுக்கு ஆறுதல் கொடுக்கும்படியான வார்த்தை சொல்லுகிறான்.

"சமுத்திரத்துக்குள் யாருக்கும் தெரியாத இந்த இடத்தில் நீ இருப்

பது ராமனுக்கு எப்படித் தெரியும்? அவள் படுகிற துயரத்தை நீ கண்டாயா?”

என்றுநீ இருந்தனை
    இடரின் வைகுறும்
ஆன்றகை அறிந்திலன்;
    அதற்குச் சான்றுதான்
வேண்டுமோ! அரக்கர்தம்
    வருக்கம் வேரொடு
மாண்டில: ஈதலால்.
    மாறு வேறுண்டோ!

[என்று நீ இருந்தனை: இங்கே நீ இருந்தனை; இடரின் வைகுறும்: பிரிவாற்றாமையின் சுழ மூழ்கிக் கிடக்கும்; ஆன்றகை அறிந்திலன்: ராமனுக்குத் தெரியாது; அதற்குச் சான்று தான் வேண்டுமோ: தெரியாது என்பதற்குச் சான்று தான் வேண்டுமோ; அரக்கர் தம் வருக்கம் வேரொடு மாண்டில: அரக்கர்களுடைய கூட்டத்தான் வேரோடு ஒழியவில்லையே; ஈதலால் மாறு வேறுண்டோ: அரக்கர்களுடைய இந்த இடம் தெரியாது என்பதைத் தவிர வேறு காரணம் ஏது—அரக்கர்கள் வேரோடு தொலையாமல் இருப்பதற்கு.]

“சந்தேகமே வேண்டாம், ராமன் விட்ட தூதவன்தான் நான் என்பதைக் காட்டுவதற்கு அடையாளப் பொருள் இருக்கிறது. அதோடு சில விஷயங்களை ஞாபகம் ஊட்டும்படி சொல்லியிருக்கிறான்.”

‘ஐயுறல்! உளதடை
    யாளம்! ஆரியன்
மெய்யுற உணர்த்திய
    உரையும் வேறுள!
கையுறு நெல்லியங்
    கனியிற் காண்டியால்,
நெய்யுறு விளக்கனாய்,
    நினையல் வே(று)’ என்றான்.

[ஐயுறல்: சந்தேகம் கொள்ள வேண்டாம்; ஆரியன் மெய்யுற உணர்த்திய: ராமன் நம்பிக்கை உண்டாகும்படிச் சொல்லி விட்ட; உரையும் வேறுள: வார்த்தைகளும் வேறு இருக்கின்றன; கையுறு நெல்லியங் கனியிற் காண்டியால்: உள்ளங் கையிலுள்ள திராக்ஷைப் பழத்துக்குள் மறைந்துவிட்ட விதையும் நரம்பையும் காண்பதுபோல் அடையாளம் பொருளோடும் சொல்லிவிட்ட வார்த்தைகளோடும் உண்மையைக் காண்பாய்; நெல்லியங்கனி: மறைவிப் பார்க்கும் திராக்ஷையைக் குறிக்கும்; நெய்யுறு விளக்கனாய்: நெய் வளமாய் விட்டு எரியும் விளக்கும் போன்றவளே — வீட்டை அழகாய் அலங்கரிப்பவளே; நினையல் வேறு என்றான்: என்னை விரோதியாக எண்ணி விடாதே; என்னைச் சந்தேகிக்க வேண்டாம்.]



மிக்க பணிவோடும் இரக்கத்தோடும் அனுமன் பேசுகிறான். தன்னிடத்தில் நம்பிக்கை உண்டாகாது தான் என்று எண்ணி மிக்க பரிவுடன் பேசினான். சீதைக்கு நம்பிக்கை உண்டாய்விட்டது. ஆனாலும் சந்தேகம் முற்றிலும் விட்டபாடாக இல்லை. தனக்குள்ளேயே அவள் சொல்லிக் கொள்ளுகிறாள்.

சந்தம்

தானன தானன தன்
    தானன தானன தன்

அரக்கனே ஆக,வே றும்
    அமரனே ஆக;அன் றிக்
குரக்கினத் தொருவனே தான்
    ஆகுக; கொடுமைநீங் கி
இரக்கமே ஆகவந் திங்(கு)
    எம்பிரான் நாமம்சொல் லி
உருக்கினன் உணர்வைத்;தந் தான்
    உயிர்;இதின் உதவியுண் டோ?

[அரக்கனே ஆக, வேறும் அமரனே ஆக: அரக்கனாகவே இருக்கட்டும் இவன், அல்லது அரக்கனுக்கு நேர் மாறான தேவர்களில் ஒருவனாகவே இருக்கட்டும்; அன்றிக் குரக்கினத்து ஒருவனே தான் ஆகுக: அப்படிக்கு அல்லாமல் குரங்கினத்தைச் சேர்ந்த ஒருவனாகவே இருக்கட்டும்— கவலையில்லை; கொடுமை நீங்கி இரக்கமே ஆக வந்திங்கு: அரக்கர்களுடைய கொடிய தன்மை சிறிதுமில்லாமல் இரக்கமே உருவெடுத்தாற் போல் இங்கே வந்து; எம்பிரான் நாமம் சொல்லி: என் நாயகனுடைய பெயரைச் சொல்லி; உருக்கினன் உணர்வை: என் இதயத்தை உருக்கி விட்டான்; தந்தான் உயிர்: போன உயிர் இவனால் திரும்ப வந்தது எனக்கு; இதின் உதவியுண்டோ: இதைப்போல உதவி என்பது வேறு உண்டோ!]

இதுவரை தன்னிடம் வந்தவர்கள் எல்லாரும் இரக்க மற்றவர்களாகவே இருந்தார்கள்.; ராவணன் பெயரையே சொன்னார்கள்; அவைகள் எல்லாம் சீதையைத் தாங்க முடியாத துன்பத்துக் குள்ளாக்கின. இப்போது அனுமன் வந்து பரிவோடு பேசினான். ராமனது பெயரையும் பக்தியோடு சொன்னான். சீதையின் இதயம் உருகி விட்டது. பாவமாக உணர்ச்சியைக் கொட்டுகிறது செய்யுள்.



# நகை எதற்கு?

எஸ்.வி.எஸ்.

ஒரு நல்ல பட்டுப் புடவையுடன் நளின காந்தன் தன் வீட்டுக்குள் நுழைந்தான். முகமலர்ந்து வரவேற்றாள் அவனுடைய மனைவி சாந்தா.

"சாந்தா, இந்தா உனக்கொரு பரிசு!" என்று சொல்லிக் கொண்டே, தான் வாங்கி வந்த அந்தப் பட்டுப் புடவையைக் கொடுத்தான். அவளும் உடனே அதை வாங்கிக் கொண்டாள். ஆனால் அவளுடைய முகம் மட்டும் மலர்ந்து தோன்றவில்லை. ஏன், மலர்ந்திருந்த முகம் குவிந்து விட்டது என்று கூடச் சொல்லலாம்.

"ஏன் சாந்தா, உனக்குப் புடவை பிடிக்க வில்லையா?" என்றான்.

"ஏன் பிடித்திருக்கிறதே!" என்றாள் சாந்தா தன் உணர்ச்சியை மறைக்கும் முயற்சியுடன்.

"பின், ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறாய்?"

"ஒன்றுமில்லை............" என்றாள்.

"ஏன்? காரணம் என்ன சொல்? ஒரு மாதிரி யிருக்கிறாயே..........!"

"நீங்கள் ஒவ்வொரு மாதமும் எனக்கு எத்தனையோ பரிசுகள் வாங்கித் தருகிறீர்கள். இதற்காக எவ்வளவோ நூற்றுக் கணக்கான ரூபாய் செலவழிக்கிறீர்கள். ஆனால், கழுத்துக்கு ஒரு சங்கிலியோ, கைக்கு ஒரு காப்போ வாங்க மட்டும் உங்களுக்கு மனசு வரவில்லை. இதை நானாகச் சொல்ல வேண்டாம் என்று இத்தனை நாளாகத் தள்ளி விட்டேன். இன்றைக்கு நீங்கள் வற்புறுத்தியதால் சொல்லி விட்டேன். தவறு இருந்தால் மன்னித்துக் கொள்ளுங்கள்"

• • •

பத்து வருஷங்களுக்கு முன்னால் சாந்தா சாந்தாவாக இருக்கவில்லை, 'குப்பச்சி'யாக இருந்தாள். ஆம், அது தான் அவளுடைய பெற்றோர்கள் அவளுக்கு இட்ட பெயர். சாந்தா பிறப்பதற்கு முன் இரண்டு குழந்தைகள் பிறந்து, இறந்து போய் விட்டதனால், சாந்தா பிறந்ததும், "எங்கள் அருமைக் குழந்தையாக இராவிட்டாலும், வீட்டுக் குப்பை போலாகிலும் தீர்க்காயுசாக இருக்கட்டும்" என்று எண்ணி குப்பச்சி என்று பெயர் வைத்தார்கள். குப்பச்சி, குப்பை போலிராமல் அருமை மாணிக்கம் போல் போற்றி வளர்க்கப்பட்டாள். அவளுக்குப் பதினாறு வயதானதும், அவளை நளின காந்தனுக்குச் சீரும் சிறப்புடன் கலியாணம் செய்து வைத்தார்கள். நளின காந்தன் தன்னுடைய மனைவியின் பெயரைக் காலத்திற் கேற்ப சாந்தா என்று மாற்றி வைத்தான்.

நளின காந்தன் அப்போது தன் மனைவியை வைர நகைகளாலும், தங்க நகைகளாலும் இழைக்கப்பட்ட பதுமை என்றுதான் நினைத்தானே யொழிய உயிரும் உணர்ச்சியுமுள்ள பெண் என்று கருதவில்லை. தன்னுடைய கஷ்ட சுகங்களில் அவளுக்கு உரிமை உண்டு என்று அவன் கருத வில்லை. அவளுடைய புற அழகைக் கண்டு நுகரும் வண்டாகத் தான் இருந்தான்.

செல்வவந்தனான நளின காந்தன் வியாபாரத் துறையில் இறங்கியிருந்தான். நல்ல லாபம் வந்து கொண்டிருந்தது. நல்ல பெயரும் புகழும் கிடைத்து வந்தது. திருமகளின் கருணை கடாக்ஷம் எப்பொழுதுமே ஒரே மாதிரியாக இருப்பதில்லை. ஒரு சமயம் நளின காந்தன் கடுஞ் சோதனைக்கு ஆளாகி விட்டான். தான் சம்பாதித்த பொருள் எல்லாம் போய் விட்டது. வீடு போய் விட்டது; நிலம் போய் விட்டது; எல்லாம் போய் விட்டது. கடன் மட்டும் மிஞ்சி நின்றது. என்ன செய்வது என்று புரியாமல் விழித்தான் அவன்.

அவனுடைய முகம் வாட்டமுற்றிருப்பதைப் பார்த்து சாந்தா ரொம்ப மனக் கஷ்டம் அடைந்தாள். அவனுக்கு இன்னும் என்ன நேர்ந்ததோ என்று எண்ணி ஏங்கினாள். "அவருடைய கஷ்டத்தை நீக்க என்னால் முடியுமானால் நான் என் ஜன்மம் சாபல்யமடைந்ததாகக் கருது

வேனே! அவருக்கு ஏதாவது உதவி செய்ய முடியாதோ?" என்று ஏங்கினாள்.

கனக காந்தன் அவளுடைய அறைக்கு வந்தான். "சாந்தா! எனக்கு நாலாயிர ரூபாய் அவசரமாக வேண்டும். உன் அப்பாவுக்கு ஒரு கடிதம் எழுதி வரவழைப்பாயா?" என்றான்.

"நாலாயிர ரூபாய் தானே வேண்டும்!"

"ஆமாம்."

"அப்படியானால் அதற்கு அப்பாவுக்கு எழுதுவானேன்? நானே நாலாயிர ரூபாய் தருகிறேன்" என்றாள்.

அடுத்த விநாடி அவள் பெட்டியிலிருந்த தன் காசுமாலையை எடுத்து வைத்தாள். கழுத்திலுள்ள ஐந்து வடம் டியாரச் சங்கிலியையும் எடுத்து வைத்தாள். கைகளில் அணிந்திருந்த வளைகளையும் கழற்றி வைத்தாள்.

அப்போது கனக காந்தனுக்குத் தன் மனசில் உண்டான உணர்ச்சி மகிழ்ச்சியா, வருத்தமா என்று புரியவில்லை. அவளையே பார்த்த வண்ணம் நின்றான்.

"இன்று தங்கம் விற்கும் விலைக்கு இந்த நகைகளை விற்றீர்களானால் நாலாயிர ரூபாய் கிடைக்கலாம்" என்றாள்.

இது நிகழ்ந்து ஆறு வருஷங்களுக்கு மேலாகிவிட்டது.

அதற்குப் பிறகு கனககாந்தன் வியாபாரச் சிக்கல்களில் சிக்கிக்கொள்ளவில்லை. அதிர்ஷ்டம் கூடி வந்தது போல் யுத்தம் ஒன்று வந்து அவனை லட்சாதிபதியாக்கி விட்டது. கவர்னர்களும், மந்திரிகளும் அவனுக்கு நெருங்கிய நண்பர்களாயினர். பல விருந்துகள் நடத்தினான். பல தேநீர்க் கச்சேரிகள் வைத்தான். இதற்கெல்லாம் பணம் ஆயிரமாயிரமாகச் செலவு செய்தான்.

ஆனால் அவனுடைய சாந்தாவுக்கு ஒரு தங்க நகைகூட வாங்கிப் பூட்டவில்லை. சாந்தாவும் நகை வாங்கிக் கொடுக்கும்படியாக அவனைக் கேட்கவும் இல்லை.

அவளுடைய பெற்றோர் "மாப்பிள்ளையின் போக்கு விசித்திரமாக இருக்கிறதே! எதற்கெல்லாமோ பணம் செலவழிக்கிறார். ஆனால் தன் சொந்த மனைவியின் கழுத்திலும் கையிலும் ஒன்றுமில்லாமல் இருப்பது தெரியவில்லையே?" என்றார்கள். இதையெல்லாம் கனககாந்தன் கேட்டும் கேளாதவன் போலவே இருந்து வந்தான். ஆனால் அன்று சாந்தாவே கேட்க ஆரம்பித்ததும் பின் வருமாறு கூறினான்:—

"சாந்தா! எதற்கெல்லாமோ பணம் செலவழிக்கும் நான், உனக்கு நகை வாங்கிப் போடுவதற்கு யோசிப்பேனா? நகையில்லாமல் உன்னைப் பார்க்கும் போதெல்லாம் அன்றைய நினைவு வருகிறது. கொஞ்சம்கூட யோசிக்காமல் நீ சந்தோஷமாக எனக்கு நகைகளைக் கழற்றிக் கொடுத்து, என்னைப் பெருங் கஷ்டத்திலிருந்து மீட்டாய் அல்லவா? அதை நினைத்தால் மனசில் சொல்ல முடியாத சந்தோஷம் பொங்குகிறது. அப்போது நகையணிந்திருந்த காலத்தை விட நூறு மடங்கு அழகாக நீ எனக்குத் தோன்றுகிறாய்."

ஏதோ இவ்வாறு கனக காந்தன் கூறிவிட்டான் என்றாலும் அவன் மனசு நிலை கொள்ளவில்லை. பாவம், சாந்தா! அவளே வாய் விட்டு நகை வேண்டுமென்று கேட்ட பிறகு நகை வாங்கிக் கொடுக்காமலிருப்பது அவ்வளவு சரியான காரியமாகத் தோன்றவில்லை. ஆகவே மறுநாளே சாந்தாவுக்கு வேண்டிய நகைகள் வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தான்.

சாந்தா அந்த நகைகளை அணியவே இல்லை; கையால் தொடக்கூட இல்லை.

"என்ன, சாந்தா? நகை வேண்டுமென்றாயே, போட்டுக் கொள்ளவில்லையா?" என்றான்.

"எனக்கு நகை எதற்கு? உங்கள் கண்களுக்கு நான் அழகாக இருக்க வேண்டும் என்பதுதானே என் லக்ஷியம்" என்றாள் அவன் மனைவி சாந்தா.

## நினைவிருக்கட்டும்!

தீவிர அபிப்பிராய பேதங் கொண்டிருந்த அறிஞர் ஒரு சமயம், ஜவாஹர்லால்ஜியுடன் காரசாரமாக வாதம் செய்துகொண்டிருந்தார். கடைசியில் அவர் ஜவாஹர்லாலுடன் வாதத்தில் ஜயிக்க முடியாமற் போகவே, "நேருஜி! எந்தப் பிரச்னைக்கும் இரண்டு கட்சிகள் உண்டு என்பது நினைவிருக்கட்டும்!" என்றார்.

உடனே ஜவாஹர்லால் "ஆமாம். ஆனால் நீங்கள் எதற்கெடுத்தாலும் தவறான கட்சியையே எடுத்துப் பேச வேண்டும் என்பது அதற்கு அர்த்தமில்லையல்லவா?" என்றார்.

# சமயத்தில் வேண்டுவது பலசாலியான மனிதரே!




ஒரிஸ்ஸா, நைஜாம் சமஸ்தானங்கள், ஆந்திர ஜில்லாக்கள் தமிழ் நாடு களுக்கு ஏஜண்டுகள்:

**சீதாராமா ஜெனரல் ஸ்டோர்ஸ்**

பெரம்பூர், செகந்திராபாத், பெஜவாடா, மதுரை

## ஜுவல்கள் அமைக்கப் பெற்ற லிவர் கை கெடியாரங்கள்

நவ நாகரீகமான அமைப்பு. குறைந்த ஸ்டாக் தான் கைவசமுள்ளது. ஒருவருக்கே இரண்டு கை கெடியாரங்களுக்குமேல் கொடுக்கப்பட மாட்டாது. சரியாக மணி காட்டும். ஒவ்வொன்றுக்கும் மூன்று வருஷ உத்தரவாதம்.



நெ. 8. பளபளப்பான

| | |
|---|---|
| குரோமியம் கேஸ் | ரூ. 35 0 |
| ரோல்டு கோல்டு (10 வருஷ உத்தரவாதம்) | ரூ. 50 0 |
| ரோல்டு கோல்டு 15 ஜுவெல்ஸ் | ரூ. 75 0 |



நெ. 9. பளபளப்பான

| | |
|---|---|
| குரோமியம் கேஸ் | ரூ. 20 0 |
| உயர்ந்த ரகம் ... | ரூ. 25 0 |
| உயர்ந்த ரகம் 15 ஜுவெல்ஸ் | ரூ. 37 0 |
| ரோல்டு கோல்டு (10 வருஷ உத்தரவாதம்) | ரூ. 50 0 |



நெ. 10. பளபளப்பான

| | |
|---|---|
| குரோமியம் கேஸ் | ரூ. 35 0 |
| உயர்ந்த ரகம் ... | ரூ. 38 0 |
| ரோல்டு கோல்டு (10 வருஷ உத்தரவாதம்) | ரூ. 48 0 |
| ரோல்டு கோல்டு 15 ஜுவெல்ஸ் | ரூ. 75 0 |



நெ. 11. பளபளப்பான

| | |
|---|---|
| குரோமியம் கேஸ் | ரூ. 40 0 |
| உயர்ந்த ரகம் ... | ரூ. 43 0 |
| ரோல்டு கோல்டு (10 வருஷ உத்தரவாதம்) | ரூ. 53 0 |
| ரோல்டு கோல்டு 15 ஜுவெல்ஸ் | ரூ. 80 0 |

பாக்கிங், தபால்செலவு அணா 14. பிரத்தியேகம். ஒரு கெடியாரத்துக்குமேல் ஆர்டர் செய்தால் தபால் செலவு இல்லை.

மேற்கண்ட வடிவங்களில் லேடீஸ் கைகெடியாரங்களுக்கு 12½ சத விகித அதிகமாகும்.

கடிதப் போக்குவரத்து ஆங்கிலத்தில்

**CALCUTTA WATCH Co. (Sec. 073)**
Post Box No. 12203, CALCUTTA - 5

## ஒவ்வொரு தினமும்



## உங்கள் சருமம் அதிக அழகைப்பெறுகிறது

**கேடில் கலந்த சோப் ரெக்ஸோனா ஒன்றே அது உங்கள் சருமத்தை அதிக ஆரோக்கியமுடையதாகவும், அப்பழுக்கற்றதாகவும், திடமாகவும் செய்கிறது.**

உங்கள் மேனியை தவருமல் ரெக்ஸோனாவினால் சுத்தம் செய்துகொள்ளுங்கள். நாளுக்குநாள் மேனி அதிக அழகு பெறுவதைக்காண்பீர்கள். ரெக்ஸோனாவில் கேடில் இருக்கிறது. சருமத்தைச் சுத்தம்செய்து மிருதுவாக்கி ஆரோக்கியமூட்டும் சக்திவாய்ந்த தைலங்களால் விஞ்ஞான முறைப்படி தயாரிக்கப்பட்ட கலப்பு மருந்து கேடில். இது உங்கள் சருமம் புது ஆரோக்கியமும் மாசற்ற சோபையும் என்றும் திகழும் புது அழகும் பெற உதவும்.

**கேடில் சேர்ந்த ரெக்ஸோனாதான் இதைச்செய்கிறது!**




# ரெக்ஸோனா
# சோப்

R.P. 41-172 TM

No. 4

## பேனா உலகில் ஒரு அதிசயம்!







நீங்கள் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த பேனா இதுதான். ஐந்தே ரூபாய்க்கு மிகவும் அழகாய் செய்யப்பட்ட கோல்டன் பிளாட்டினம் பௌண்டன் பேனா என்றால் மிகவும் மலிவல்லவா? கவர்ச்சிகரமான ஐந்து நிறங்களில் வருகிறது. ஆசி அடைவதைத் தடுத்து சரளமாக ஊறச் செய்வதில் பெயர் பெற்ற "தங்கம் போன்ற" முனையுடன் கூடியது. மிகவும் பொருத்தமாகவும் அழகாகவும் இயந்திரத்தினால் வார்க்கப்பட்ட நிக்கல் ஸில்வர் மூடியுடன் கூடியது. உங்களுக்கேற்ற பேனா இதுதான்!

தங்கத்தைப் போன்ற முனையுடன் ஸ்ட்ரீம் லைன்

**ரூ. 5/-**

இங்கிலாந்தில் செய்யப்பட்டது

# புதிய கோல்டன்

# Platignum

"தங்கத்தைப் போன்றது"

வர்த்தக விசாரணைகளுக்கு முழு உரிமைபெற்ற விநியோகஸ்தர்கள் :

**மூல்லர் & பிப்ஸ் (இந்தியா) லிமிடெட், 15, கங்குராம செட்டித் தெரு, மதராஸ்**

---

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
118-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk Madras

Regd. No. M. 4392

# குளுமை உங்கள் கூடவே இருக்க

ஒருசில துளிகள் "போர்ஸீசன்ஸ்" ஒடிக்கோலன் அவ்வளவு புதுமையளிக்க வல்லது --- பகல் வேளை உஷ்ணத்திலும்சரி, அல்லது சாயங்கால உல்லாசப் பொழுது போக்கு சமயத்திலும்சரி. நீங்கள் இணையிலாவசீகரத்துடன் விளங்குவதின் இரகசியம் அதன் குளுமையும் புதுமை யளிக்கும் நறுமணமுமே யாகும்.




கோட்டி

## "போர் ஸீசன்ஸ்"

## ஒடிக் கொலன்